# உ.வே.சா.வின்
# குறுந்தொகை உரைத்திறன்

முனைவர் நிர்மலா மோகன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

உ.வே.சா. அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் : பலர்)

வரிசை எண் : 14


**BIBLIOGRAPHICAL DATA**

| | | |
|---|---|---|
| Title of the Book | : | U.Vē.Cā.vin̲ kur̲untokai uraittir̲an̲ |
| Author | : | Dr. Nirmala Mohan<br>Professor (Retd.)<br>Dept. of Tamil<br>Sentamizh College, Madurai. |
| General Editor | : | Dr. T. Mahalakshmi<br>Associate Professor<br>Faculty of Tamil Literature and Manuscriptology<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 690 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 96 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.45 /- (Rupees Forty Five only) |
| Printed by | : | United Bind Graphics<br>42/93, Millers Road<br>Kilpauk, Chennai- 600 010 |
| Subject | : | Kuruntokai Commentary of<br>Dr. U.V.Swaminathaiyar |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

குறவஞ்சி இலக்கியம் குறித்த சிறந்ததொரு ஆய்வினைச் செய்து தமிழகத்தில் பெரும் புகழ்பெற்றுள்ள முனைவர் நிர்மலா மோகன் அவர்கள் எழுதியுள்ள **உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன்** எனும் இந்நூல் சங்க இலக்கிய ஆய்வாளர்களுக்கும் சங்க இலக்கியச் செம்பதிப்பு குறித்த சிந்தனையாளர்களுக்கும் இலக்கியத் திறனாய்வாளர்களுக்கும் துணை செய்வதாய் அமைகிறது.

**கூற்றுவிளக்கம்**

**மூலமும் பிரதி பேதமும்**

**பழைய கருத்து**

**புலவர்கள் பெயர்கள்**

**பதவுரை**

**முடிவும் கருத்தும்**

**விசேடவுரை**

**குறிப்புப்பொருள் சுட்டுதல்**

**சிலம்புகழி நோன்பு போன்ற பழக்கவழக்கங்களைச் சுட்டுதல்**

**மேற்கோள் ஆட்சி**

எனும் உட்தலைப்புகளை வகுத்துக்கொண்டுபதிப்புச் செம்மல் உ.வே.சா. அவர்களது பணிகளை விளக்கி அவரது உரைப் பகுதிகளைப் பக்கந்தோறும் எடுத்துக்காட்டி எழுதியிருப்பது சங்க இலக்கிய ஆய்வாளர்களுக்கான சிறந்த வழிகாட்டும் படிநிலை விளக்கமாக அமைந்துள்ளது. உரைத்திறன் எனும் இயல் மூன்றில் உ.வே.சா.வின் உரைத்திறனை இரண்டு வகைகளாகப் பிரிக்கிறார்.

1. உரை மரபுகள், 2. உரை நயங்கள்

உரை மரபு எனும் தலைப்பில் இந்நூலாசிரியர் விளக்கும் முறைமையைப் பின்வருமாறு எடுத்துக்காட்டலாம்.

ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லென (குறுந். 63) என்னும் பாடல் வரியில் வரும் 'இல்லோர்' என்ற சொல்லுக்குப் 'பொருளில்லாதவர்' என்று பொருள் கூறியவர் பொருளின்மையையே 'இன்மை' என்றும், பொருளில்லோரையே 'இல்லோர்' என்றும் வழங்குதல் மரபு

என மரபில் வழங்கும் பொருளை எடுத்துக்காட்டி உ.வே.சா. விளக்கம் தந்துள்ளார்.

'குன்றக் கூகை குழறினும்' (குறுந். 153) என்னும் பாடல் வரியில் வரும் 'குழறுதல்', என்னும் சொல்லுக்குப் 'பொருளற்ற ஒலியைச் செய்தல்; கூகை ஒலித்தலைக் குழறலென்றல் மரபு'

என்று மரபு சான்ற பொருள் கூறி விளக்கம் அளித்துள்ளார் உ.வே.சா.

நன்னன், ஆதிமந்தி, வெள்ளிவீதியார், ஔவையார் போன்றவர்களின் வரலாற்றுச் செய்திகளையும் பாடலி நகர் மற்றும் வடுகர் போன்ற பழமை மிகு நகரத்தையும் மக்களையும் குறிப்பிட்டுப் பண்பாடு மற்றும் பழக்க வழக்கங்களை உ.வே.சா. காட்டும் முறைமைகளை விளக்கியுள்ளார் இந்நூலாசிரியர். காட்டாக

*பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்*
*வருவீர் உளீரோ எனவும் (குறுந். 118)*

என வரும் குறுந்தொகைப் பாடலுக்கு உரை வகுத்த உ.வே.சா.

தன் வீட்டில் விருந்தினர் பலர் வந்து உண்ணுவாராதலின், அவர் தடையின்றிப் புகும் வாயிலைப் பலர் புகு வாயிலென்றாள். இராக் காலத்தில் விருந்தினர்களைப் புகவிட்டுப் பின்னும் எவரேனும் உள்ளாரோ என ஆராய்வாராகி, ஏவலாளர்கள் வினவி, ஒருவரும் இலராகி, வாயிற் கதவை அடைத்தனர்

என்று தமிழரின் மிக உயர்ந்த விருந்தோம்பற் பண்பினைப் போற்றுகின்றார். எனுமாறு உ.வே.சா. உரைத் திறன்களை எடுத்துக்காட்டி விளக்கப்பட்டுள்ள இந்நூல் சங்க இலக்கிய ஆர்வலர்களுக்குப் பெருவிருந்தாகும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு. இரா. சிவக்குமார் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

## ஆசிரியர் குறிப்பு



நிர்மலா மதுரையில் 05-12-1951ஆம் நாளன்று பிறந்தார். தந்தை: துரைசாமி; தாய்: சாவித்திரி. கல்லூரிக் கல்வியைப் பாத்திமா, கல்லூரியில் பயின்ற இவர், 1974இல் முதுகலைப் பட்டம் பெற்றார். 1977இல் எம்.ஃபில். வகுப்பில் பல்கலைக்கழக முதல் இடத்தினைப் பெற்றுத் தேறினார். மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் மூதறிஞர் தமிழண்ணலின் வழிகாட்டலில் 'குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் - ஓர் ஆய்வு' என்னும் பொருளில் ஆராய்ந்து 1982ஆம் ஆண்டில் முனைவர் பட்டம் பெற்றார்.

சிறிது கால வங்கிப் பணிக்குப் பின்னர் முனைவர் நிர்மலா நான்காம் தமிழ்ச் சங்கம் எனச் சிறப்பிக்கப் பெறும் செந்தமிழ்க் கல்லூரியில் 1983இல் விரிவுரையாளராகப் பணியில் சேர்ந்தார். அங்கே 27 ஆண்டுக் காலம் பணியாற்றி 2011இல் ஓய்வு பெற்றார்.

நிர்மலாவின் வழிகாட்டலில் இதுவரை 16 பேர் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்; எண்பதுக்கு மேற்பட்டோர் எம்.ஃபில். பட்டம் பெற்றுள்ளனர். தற்போது 10 பேர் முனைவர் பட்டத்திற்கு ஆய்வு செய்து வருகின்றனர்.

புதுதில்லி சாகித்திய அக்காதெமியின் 'இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை'யில் 'கிவா. ஜகந்நாதன்', 'சோமலே', 'பண்டிதமணி' ஆகியோர் குறித்து நூல்கள் எழுதியுள்ளார். 'சிற்றிலக்கியங்களில் மும்முனைப் போக்கு', 'ஆண்டாள்', 'சங்கச் சான்றோர் ஆளுமைத் திறன்' என்பன இவரது ஆய்வு மனப்பான்மை யினைப் பறைச்சாற்றும் நூல்கள். 'இலக்கியத் தென்றல்', 'இலக்கிய மணிகள்', 'இலக்கிய நெறி', 'இலக்கிய மலர்கள்', 'குறவஞ்சி இலக்கியம்' என்னும் இவரது நூல்கள் மதுரை காமராசர் பல்கலைக் கழகம் உள்ளிட்ட பல்வேறு பல்கலைக் கழகங்களிலும் தன்னாட்சிக் கல்லூரிகளிலும் பாடநூல்களாகப் பரிந்துரைக்கப்பட்டுள்ளன.

முனைவர் நிர்மலா தமிழ்ப்பணி ஆற்றுவதற்காக அமெரிக்கா (3 முறை), சிங்கப்பூர், மலேசியா, இலங்கை ஆகிய அயல்நாடு களுக்குச் சென்று வந்துள்ளார். அமெரிக்கத் தமிழ்ச் சங்கமும் தமிழ்நாடு அறக்கட்டளையும் இணைந்து 2002இல் இவருக்குத் 'தமிழ்ச் சுடர்' என்னும் விருது வழங்கிச் சிறப்பித்துள்ளன. 'சிறந்த பேச்சாளர் விருது', 'தமிழ்ப் பணிச் செம்மல் விருது', 'ஔவை

விருது', 'கிருபானந்த வாரியார் விருது' முதலான விருதுகளையும் இவர் பெற்றுள்ளார்.

நிர்மலா பொதிகைத் தொலைக்காட்சி மற்றும் பல்வேறு தனியார் தொலைக்காட்சிகளிலும் வானொலிகளிலும் நூற்றுக் கணக்கான உரைகள் வழங்கியுள்ளார். 'அமுதசுரபி', 'கல்கி', 'மங்கையர் மலர்', 'குமுதம்' ஆகிய பத்திரிகைகள் நடத்திய போட்டிகளில் கலந்துகொண்டு பரிசுகள் பெற்றுள்ளார்.

முனைவர் நிர்மலா ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு (மதுரை), எட்டாம் உலகத் தமிழ் மாநாடு (தஞ்சாவூர்), உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு (கோவை), ஆறாம் உலகச் சைவ மாநாடு (தஞ்சாவூர்) ஆகியவற்றில் கலந்துகொண்டு ஆய்வுக் கட்டுரைகள் வாசித்துள்ளார். கலைக்களஞ்சியங்களுக்காகக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

சாகித்திய அக்காதெமி (புதுதில்லி), செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் (சென்னை), திருமலை திருப்பதி தேவஸ்தானம் (ஆழ்வார் பிரபந்தத் திட்டம்) ஆகியவற்றுடன் இணைந்து முனைவர் நிர்மலா பல்வேறு பயிலரங்குகளையும் கருத்தரங்குகளையும் நடத்தியுள்ளார்.

# பொருளடக்கம்

# 1. உ.வே.சா. என்றோர் ஆளுமை

*தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்*
*தோன்றலின் தோன்றாமை நன்று* (குறள். 236)

என வரும் பொய்யாமொழிக்கு டாக்டர் உ.வே.சாமிநாதையர் வாழ்க்கை ஓர் உயிருள்ள இலக்கியம்.

> *சாமிநாத ஐயர் தமிழிலே பிறந்தார்; தமிழிலே வளர்ந்தார்; தமிழிலே வாழ்ந்தார். அவர் பிறப்புந் தமிழ்; வளர்ப்புந் தமிழ்; வாழ்வுந் தமிழ். அவர் மனமொழி மெய்களெல்லாம் தமிழே ஆயின. அவர் தமிழாயினர்; தமிழ் அவராயிற்று. அவர் தமிழ்; தமிழ் அவர்*[1]

என்று அறிஞர் திரு.வி.க. குறிப்பிடுவதற்கேற்பத் திகழ்கிறது 'தமிழ்த் தாத்தா' என்று எல்லோராலும் அழைக்கப்படும் உ.வே.சாமிநாதையரின் வாழ்க்கை.

பழந்தமிழ் இலக்கியங்களுக்கு உ.வே.சா. செய்துள்ள தொண்டு அளப்பரியது. தமிழ் மொழிக்குச் செம்மொழி என்னும் பெருமையைப் பெற்றுத் தந்த சங்க இலக்கியங்களையும், ஐம்பெருங் காப்பியங்களையும் 19-ஆம் நூற்றாண்டின் இறுதி வரை மக்கள் அறிந்திருக்கவில்லை. எப்போதாவது, எங்காவது மேற்கோளாகக் காட்டப் படும் சிற்சில குறிப்புக்களை மட்டுமே அறிந்திருந்தனர்; பனை ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டிருந்த பழந்தமிழ் இலக்கியங்கள் தமிழ்நாட்டின் பல பகுதிகளில், பல குடும்பங்களில் பாதுகாக்கப்பட்டு வந்தன; ஆனால் அவற்றைப் படித்தறியும் திறமை அவர்களுக்கு இல்லை; படித்தறிந்த அறிஞர்க்கு அவை இருக்கும் இடங்கள் தெரியவில்லை. ஆனால், அதே காலத்தில் வடமொழி இலக்கியப் படைப்புகள் மேலை நாட்டு அறிஞர்களை மிகவும் கவர்ந்திருந்தன. ஏனெனில் அவை எளிதில் கிடைத்தன. இந்தச் சூழ்நிலையில், ஏட்டுச் சுவடிகளில் காணாமல் போன இலக்கியங்களைத் தேடிக் கண்டு பிடித்து, வெளிச்சத்திற்குக் கொண்டு வரவேண்டிய கட்டாயம் தமிழ் அறிஞர்களுக்கு ஏற்பட்டது. அப்படி கொண்டு வர வேண்டும் என்று முயன்ற அறிஞர் பெருமக்களுள் ஒருவர்தான் மஹாமஹோபாத்யாய, தாக்ஷிணாத்திய கலாநிதி, தமிழ்த் தாத்தா, டாக்டர் உத்தமதானபுரம் வேங்கடசுப்பையர் சாமிநாதையர் (1855-1942).

தமிழ்நாட்டில் மட்டுமல்லாது, பிற மாநிலங்களிலும் பரவிச் சிதறிக் கிடந்த பழந்தமிழ் இலக்கியங்கள் நிறைந்த ஏட்டுச் சுவடிகளைத் தம்முடைய கடின உழைப்பாலும், விடாமுயற்சியாலும் தேடித் தேடித் திரட்டினார் உ.வே.சாமிநாதையர். இதன் காரணமாக, அவர் நீண்ட தூரப் பிரயாணங்களையும் மேற்கொண்டார்; இறுதியில் அழியாத இலக்கியப் படைப்புகளையெல்லாம் தமிழுக்குக் கொண்டு வந்து சேர்த்தார்; பல்வேறு இலக்கிய ஓலைச்சுவடிகளை ஆராய்ந்து, ஒப்பு நோக்கி, சேர்க்க வேண்டியதைச் சேர்த்து நீக்க வேண்டியதை நீக்கி, இலக்கியங்களைப் பதிப்பித்த பெருமை உ.வே.சா.வையே சாரும்.

## பிறப்பும் வளர்ப்பும்

தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள உத்தமதானபுரத்தில் வாழ்ந்த ஓர் ஏழைக் குடும்பத்தில், சங்கீத மேதை வேங்கடசுப்பையருக்கும் சரஸ்வதி அம்மையாருக்கும் 1855-ஆம் ஆண்டு மாசி மாதம் ஒன்பதாம் நாளில் மகனாகப் பிறந்தார் வேங்கடராமன் என்னும் உ.வே.சா. பாட்டனார் அரிச்சுவடி சொல்லித் தர, தம் ஐந்தாம் வயதில் கல்வி பயில ஆரம்பித்தார்; உபநயனம் செய்தபோது, அவர் பெயரை வேங்கடராம சர்மன் என மாற்றினார் பாட்டனார். இப்பெயரும் பின்னாளில் மாறியது; அவருக்கு ஆசானாக விளங்கிய மீனாட்சி சுந்தரம் பிள்ளை, ஒருநாள் இவரை நோக்கி, 'உமக்கு வீட்டில் வேறு பெயர் உண்டோ?' என்று கேட்டார். அதற்கு இவர், 'வேங்கடராமன் என்பது மூதாதையின் பெயராதலின், என் பெற்றோர் சாமா என்ற செல்லப் பெயரால் அழைப்பார்கள்' என்று பதில் சொன்னார். சாமா என்பது சாமிநாதன் என்பதன் சுருக்கம் ஆதலின், குரு, 'இனி நான் உன்னைச் சாமிநாதன் என்றே அழைக்கப் போகிறேன்' என்றார்; நாளடைவில் பெற்றோர் இட்ட பெயர் மறைந்தது; குருமூர்த்தி இட்ட சாமிநாதப் பெயர் நிலைத்துவிட்டது.[2] பதின்மூன்றாவது வயதில் இவருக்குத் திருமணம் நடைபெற்றது; இவரது மனைவியார் மாளாபுரத்துக் கணபதி ஐயரின் மகள் மதுராம்பிகை ஆவார்.

தமிழைப் படிக்க வேண்டும் என்னும் ஆர்வத்துடன் சின்னப்பண்ணை விருத்தாசல ரெட்டியாரிடம் சேர்க்கப்பட்டார் உ.வே.சா. ரெட்டியார் பெரிய செல்வந்தர்; தமிழ் வித்துவான்; இலக்கண, இலக்கியங்கள்மேல் மிகுந்த காதல் கொண்டவர்; தம்மிடம் படிப்பவர்க்கு இலவசமாகப் பொருளுதவி செய்பவர். அவர் உ.வே.சா.வை விடியற்காலை நான்கு மணிக்கே எழுப்பி விடுவார்; திருவாசகம், திருப்பாவை, திருவெம்பாவை படிக்கச் செய்வார்; கேள்விகள் கேட்டு, மனத்தில் பதியச் செய்வார். சிறிது காலத்திற்குப்

பின்னர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் பாடம் கேட்க அனுப்பி வைத்தார்; பொருளுதவி செய்வதாகவும் வாக்களித்தார்; அங்கே, அவருடைய மாணவர்களுள் ஒருவரான சவேரிநாதரிடம் நைடதம் பயின்றார்; இதற்கிடையே கோபாலகிருஷ்ண பாரதியாரிடம் சங்கீதமும் பயின்றார் உ.வே.சா. 'இசையில் பழக்கம் வைத்துக் கொண்டால் இலக்கண இலக்கியங்களில் தீவிரப் புத்தி செல்லாது' என்றார் பிள்ளை. அன்று முதல் சங்கீதப் பயிற்சியை விடுத்தார்.

அதன்பின் கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராகச் சேர்ந்தார் உ.வே.சா. சிலப்பதிகாரம் 'இந்திர விழவூரெடுத்த காதை' பாடமாக இருந்தது. திருவாவடுதுறை மடத்தில் ஏட்டுப்பிரதி இருப்பதை அறிந்தார்; அதைப் படித்துப் பாடம் நடத்தினார் உ.வே.சா.

ஒருமுறை சேலம் மாவட்ட நீதிபதியாக இருந்த இராமசாமி முதலியாரைச் சந்தித்தார் உ.வே.சா. இச்சந்திப்பு அவருடைய வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. 'யாரிடம் படித்தீர்கள்?' எனக் கேட்டார் அவர். உ.வே.சா. தாம் மீனாட்சி சுந்தரம்பிள்ளையிடம் கற்றதையும், படித்த நூல்களையும் அடுக்கினார். அதைக் கேட்ட முதலியார், 'இதெல்லாம் படித்து என்ன பயன்? இவற்றின் மூலமானதைப் படிக்கவில்லையே... அரிய நூல்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணியைப் பாடமாக நடத்து வீர்களா?' என்று வினவினார். 'அப்படியே செய்வேன்' என்றார் உ.வே.சா. நீதிபதி வைத்திருந்த ஏட்டுச் சுவடி சீவக சிந்தாமணியாக இருப்பதைக் கண்டு மகிழ்ந்து, எவ்விதத் தயக்கமுமின்றி, உ.வே.சா. படித்து விளக்கம் சொன்னார். பனை ஓலைச் சுவடிகளில் உள்ள சீவகசிந்தாமணியை, அவர் மிக்க கவனத்துடன் தணிக்கை செய்து, அந்த நூலை, அடிக்குறிப்புகளுடனும், பொழிப்புரைகளுடனும் 1888-இல் அச்சிட்டு வெளியிட்டார். அது தமிழ் ஆர்வலர்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றது; நூல் வெளிவருவதற்கு முன்பே அவற்றை விற்றுத் தீர்க்கும் புதிய முறையை அவர் ஏற்படுத்தினார்; இதனால் நிதி குவிந்தது.

சிந்தாமணி மட்டுமன்றி, வழக்கில் இல்லாத வேறு நூல்கள் என்னென்ன என்று தேடத் தொடங்கினார் உ.வே.சா. திருவாவடுதுறை ஆதீனத்துப் புத்தக சாலையில் எட்டுத்தொகை ஏடுகள் கிடைத்தன. வேலூரில் வாழ்ந்த குமாரசாமி ஐயர் மூலம் பத்துப்பாட்டு ஏட்டுச் சுவடிகள் கிடைத்தன. நெல்லையில் கவிராஜ ஈசுவரமூர்த்தி பிள்ளையிடம் கொங்குவேள் மாக்கதை பழஞ்சுவடியைப் பெற்றார். திருநெல்வேலியில் உள்ள சாலீஸ்வர ஓதுவார் வீட்டில் சிலப்பதிகார

மூலப் பிரதியையும் அரைகுறையான உரைப் பகுதியையும் பெற்றார் உ.வே.சா.; குன்றக்குடி ஆதீனத்துத் தலைமைக் குமாஸ்தா அப்பாபிள்ளை மூலம் சிலப்பதிகார மூலமும், மணிமேகலை மூலமும் கிடைத்தன. அப்பிரதிகள் மிதிலைப்பட்டியில் கிடைத்ததாக அவர் கூற, உ.வே.சா. அங்குச் சென்றும் தேடினார்; அவருக்குப் புறநானூற்று உரை கிடைத்தது. அதன் பின்னர், தமிழ் இலக்கியப் படைப்புகளின் மூலப்பிரதிகளைத் தேடித் தேடி, ஊர் ஊராக, தெருத்தெருவாக, வீடு வீடாகச் சென்றார். அந்தத் தேடுதல் வேட்டை அவர் சாகும் வரை தொடர்ந்தது; பல தமிழ் ஆர்வலர்கள் தம்மிடமிருந்த ஏட்டுச் சுவடிகளைத் தாமாகவே முன்வந்து அவரிடம் கொடுத்தனர்; ஒவ்வொரு கிராமத்திற்கும் அவர் நேரில் சென்றார்; ஒவ்வொரு வீட்டின் கதவையும் அவர் தட்டினார்; ஓலைச் சுவடிகளைத் தேடும் பைத்தியமானார். எங்கே சுவடி, எங்கே சுவடி என்று அலைந்தார். எந்தக் குப்பையில் கிடந்தாலும் அருவருப்படையாமல் அவற்றைப் பொறுக்கி எடுத்து ஆராய்ந்தார்; இத்தகைய முயற்சியினால் ஏராளமான ஓலைச் சுவடிகள் வீட்டில் குவிந்தன. அறைகளிலும், அலமாரிகளிலும், பெட்டிகளிலும், சாமான்கள் வைக்கும் இடங்களிலும், வெயில் காயும் முற்றங்களிலும், சமையலறை யிலும் கூடப் பனைஓலைச் சுவடிகள் ஏராளமாகக் குவிந்து கிடந்தன.

> *1888-ஆம் ஆண்டு சீவக சிந்தாமணியைப் பதிப்பித்து வெளியிட்டார் உ.வே.சா. 'தமிழ்த் தாயே! நீ சிந்தாமணியை இந்த ஏழைமுகமாக மீட்டும் அணிந்து கொண்டாய். பிற ஆபரணங்களையும் அடியேன் கைப்பற்றும்படி அருள் செய்ய வேண்டும்!' எனச் சீவகசிந்தாமணி முகவுரையில் தமிழன்னையை வேண்டினார். அந்த வேண்டுதல் வீண்போகவில்லை; பத்துப்பாட்டு (1889), சிலப்பதிகாரம் (1892), புறநானூறு (1894), புறப்பொருள் வெண்பாமாலை (1895), மணிமேகலை (1898), ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, குறுந்தொகை, அகநானூறு, பெருங்கதை ஆகிய பண்டைய இலக்கியங்களை ஒவ்வொன்றாகப் பதிப்பித்து, வந்தனைக்குரிய செந்தமிழ்ப் பெரியாராகத் தமிழர் நெஞ்சில் இடம் பெற்றார் உ.வே.சா.*[3]

இவற்றுள் சிலப்பதிகாரமும், மணிமேகலையும், புறநானூறும், தமிழ் மக்களால் பெரிதும் விரும்பி வரவேற்கப்பட்டன. புறநானூறு என்னும் நூல் சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்களின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகத் திகழ்ந்தது; உ.வே.சா.வின் பேரறிவுத் திறனால் நுணுகி ஆராயப்பட்டு வெளியிடப்பட்டது. ஏறத்தாழ ஐம்பது

ஆண்டுகளில் கவிதைகள், சிறிய பாடல்கள், புராணங்கள் மற்றும் பக்தி இலக்கியங்கள் அடங்கிய 100 புத்தகங்களை உ.வே.சா. வெளியிட்டார்.[4]

## பதிப்பு முயற்சி

சீவக சிந்தாமணியைப் பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் போது, உ.வே.சா. சிந்தாமணியைப் பலமுறை ஆராய்ந்தார்; சிந்தாமணியில் பாடபேதம் இருந்ததால், வேறு ஏட்டுப் பிரதிகளையும் ஆராய்ந்து, பிழைகளை நீக்கி, பாட்டு, பொழிப்புரை, விசேட உரை எல்லாவற்றையும் பிரித்து, செய்யுளைப் பெரிய எழுத்திலும், பொழிப்புரை, விசேட உரையைச் சிறிய எழுத்தில் பாரா பாராவாக அமைத்தும், குழப்பங்களை நீக்கி வெளியிட்டார் உ.வே.சா. 1891-இல் பாரிசிலிருந்து ஐயருக்கு ஒரு கடிதம் வந்தது. தமிழாசிரியர் ஜுலியன் வின்ஸோன் என்னும் பிரெஞ்சு அறிஞர் சிந்தாமணிப் பதிப்பைப் படித்துப் பாராட்டி எழுதியிருந்தார். தெளிவான விளக்கமான அடிக்குறிப்புகளுடனும், பொழிப்புரைகளுடனும், அட்டவணை, பொருளடக்கம் முதலியனவும் அடங்கிய தெள்ளத் தெளிவான நூல்கள் பின்சந்ததியினருக்குப் பயன்படும் என்றெண்ணி மக்களால் பாதுகாக்க முனைந்தமையே அவருடைய பேரறிவுக்கும் பெரு முயற்சிக்கும் சான்றாக அமையும். மணிமேகலை நூலைப் பதிப்பிக்கும் போதும், உ.வே.சா. பௌத்த சமயத்தைப் பற்றி நன்கு அறிந்த – கும்பகோணத்தில் இருந்த– மளூர் ரங்காச்சாரியிடமும், இலங்கையில் உள்ள நண்பர் பொ.குமாரசாமியிடமும் பேசிப்பேசிப் பல தகவல்களை அறிந்து வெளியிட்டார்.[5]

சிலப்பதிகாரத்தை ஆராய்ந்தபோது, அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டும் செய்யுட்களும், சூத்திரங்களும் உ.வே.சா.வுக்கு மிகுந்த வியப்பை அளித்தன; சிலப்பதிகாரம் கிடைத்ததனால், செங்குட்டுவன் வடநாடு சென்று கண்ணகியின் படிமச் சிலைக்குக் கல் கொணர்ந்த செய்தியும், சங்க காலத்தை நிர்ணயிப்பதில் சிலப்பதிகாரம் முக்கியப் பங்கு வகிப்பதையும் அறிய முடிகிறது; கொங்குவேள் மாக்கதையைப் புரட்டியபோது உதயணன் என்ற பெயர் பல இடங்களில் இடம் பெறுவதையும், அடியார்க்கு நல்லார் உரையில் 'பெருங்கதை' என்று வருவதையும் எண்ணி இதையும் பதிப்பிக்க முனைந்தார் உ.வே.சா. அச்சமயம், 'நவராத்திரி விழாவுக்கு வர வேண்டும்' என்று இராமநாதபுரம் மன்னர் பாஸ்கர சேதுபதியிடமிருந்து அழைப்பு வர, அங்குச் சென்றார் உ.வே.சா. சேதுபதி மன்னர் உ.வே.சா.வின் தமிழ்ப் பணியைப் போற்றிப் புகழ்ந்து, பொற்கிழி வழங்கி, இரண்டு சாதராக்களைப் போர்த்திக் கௌரவித்தார் (சாதரா

— விலையுயர்ந்த சால்வை). கும்பகோணம் வந்த உ.வே.சா. பாஸ்கர சேதுபதி போர்த்திய விலை உயர்ந்த இரண்டு சாதராக்களையும் முந்நூறு ரூபாய்க்குக் கொடுத்து விட்டு, சிலப்பதிகாரப் பதிப்பில் தமக்கு ஏற்பட்டிருந்த கடனை அடைத்தார். “ஒரு பெரிய சமஸ்தானத்தில் பெற்ற மரியாதை! அவற்றைத் தாங்கள் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டாமா?” என வினவினார் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் அம்பலவாண தேசிகர்.

> *தமிழ்த்தாயின் திருப்பணியால் வந்த கௌரவம் தானே? அவற்றை மீண்டும் அதற்கே உபயோகப்படுத்துவது தானே நியாயம்?*[6]

என்றார் உ.வே.சா.

## இசைக் குறிப்புகள்

சிறந்த, புகழ்பெற்ற இசைமேதையான வேங்கட சுப்பையருக்கு மகனாகப் பிறந்த உ.வே.சா.வும் இசை ஞானம் மிக்கவராக விளங்கியுள்ளார்; கோபாலகிருஷ்ண பாரதியாரிடம் சிறிது காலம் இசை பயின்றது அவரது இசைப் புலமையை மிகுவித்தது. நல்ல கல்வியாளரும், ஆராய்ச்சியாளருமான அரிமளம் எஸ்.பத்மனாபன் என்பவர் உ.வே.சாமிநாத ஐயருடைய இசை ஞானத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, ‘அவர் தமிழிசையை ஆளுவதில் வல்லவர். மிகச் சிறந்த பங்களிப்பை அவர் தமிழிசைக்குத் தந்திருக்கிறார்’ என்று கூறுகிறார்.[7] தமிழிசையிலும் வல்லவரான உ.வே.சா. சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய நூல்களில் குறிப்பிடப்படும் இசைகளுக்கும் விரிவான உரை எழுதித் தம்முடைய இசை ஞானத்தைப் புலப்படுத்தியுள்ளார். தெலுங்கு இசையும், கர்நாடக இசையும் தமிழ்நாட்டில் கொடிகட்டிப் பறந்த காலக்கட்டத்தில் உ.வே.சா.வின் பதிப்புகளில் வெளிவந்துள்ள இசைக்குறிப்புகள் தமிழிசைக்கு ஒளிமயமான நிலைப்பாட்டைப் புலப்படுத்தியதுடன், பல்வேறு ஆராய்ச்சிகளுக்கும் வழிவகுத்தன.

> *ஆபிரகாம் பண்டிதர், தாம் எழுதிய கருணாமிர்த சாகரம் என்னும் நூலில் முதன்முதலாகத் தமிழிசையை சிறப்பாக ஆராய்ந்துள்ளார். அதனைத் தொடர்ந்து விபுலானந்த அடிகள் தம்முடைய யாழ்நூல் என்னும் நூலில், தமிழிசையைப் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார். இவ்விரு இசை வல்லுநர்களும், சாமிநாதையருடைய*

> *வெளியீடுகளில் வந்துள்ள இசைச் செல்வங்களே எங்களை மேலும் மேலும் ஆராய்ச்சி செய்வதற்கு ஊக்குவித்தன என்கின்றனர். மற்றுமொரு தமிழிசை அறிஞரான வீ.ப.கா.சுந்தரம், சாமிநாத ஐயருடைய வெளியீடுகள் இல்லையென்றால் கருணாமிர்த சாகரம் என்னும் நூலும் இல்லை என்கிறார்.*[8]

இங்ஙனம் தமிழிசை ஆய்வாளர்க்கு எல்லாம் முன்னோடியாக விளங்கும் வகையில் உ.வே.சா.வின் சிலப்பதிகாரப் பதிப்பு தமிழிசையைப் பற்றிய மிகுதியான செய்திகளைத் தந்து நிற்கின்றது. ஒத்த தொடர்கள், ஒத்த /வரலாற்றுக் குறிப்புகள், மேற்கோள்கள், ஆராய்ச்சிக் குறிப்புகள் முதலியன எல்லாம் தந்து பதிப்புலகில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நிலையில் விளங்கினார் சாமிநாதையர்.

> *மேலை நாட்டவர், நூல்களைப் பதிப்பிக்கும் முறைகளையெல்லாம் தக்கார் வழியே அறிந்தார். அச்சிட்டு மெய்ப்புத் திருத்துதலிலும் (புருப்) ஏடுகளை மேலும் மேலும் தொகுத்தலிலும் தம் பொழுதையெல்லாம் செலவிட்டுத் தம் வாழ்வைத் தவ வாழ்வு ஆக்கினார்.*[9]

கும்பகோணம் கல்லூரியில் இருந்து சென்னை மாநிலக் கல்லூரிக்குச் சென்ற வாய்ப்பு, அறிஞர்கள் தொடர்புக்கும் அச்சுப் பணிக்கும் பெருவாய்ப்பாயிற்று. பதிப்பாளர்களை மதிப்பிடும் திரு.வி.க.

> *பழந்தமிழ் இலக்கிய வெளியீட்டிற்குக் கால் கொண்டவர் ஆறுமுக நாவலர்; சுவர் எழுப்பியவர் தாமோதரம் பிள்ளை; கூரை வேய்ந்து நிலையம் கோலியவர் சாமிநாதையர்*[10]

என்று குறிப்பிடுவது உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை.

## மனித நேயம்

உ.வே.சா. தமது குருநாதர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை மறைந்தபின், தனியாக மாயவரத்தில் வாழ்ந்து வந்த அவரது மனைவியார் காவேரி ஆச்சிக்கு உதவி செய்வதைத் தமது கடமையாகக் கொண்டிருந்தார்; மகாவித்துவானின் வாழ்க்கை வரலாற்றை எழுதி வெளியிட்டார்.

பழந்தமிழ் நூல்களைப் பதிப்பித்த உ.வே.சா. மணிமேகலைச் சுருக்கம், சிலப்பதிகாரக் கதைச் சுருக்கம், உதயணன் கதை, புத்தர்

சரித்திரம், சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், நினைவு மஞ்சரி, கண்டதும் கேட்டதும், புதியதும் பழையதும் முதலான பல உரைநடை நூல்களையும் எழுதினார்.

தம் குருநாதர் வரலாறு மட்டுமன்றி, தியாகராசச் செட்டியார், மகாவைத்தியநாதையர் என்பார் வரலாறுகளையும் எழுதினார் உ.வே.சா.; மேலும், நன்னூல் மயிலைநாதர் உரை, சங்கர நமச்சிவாயர் உரை முதலான இலக்கண நூல்களையும், திருவிளையாடல் புராணம், தணிகைப் புராணம் முதலானவற்றையும் பதிப்பித்துள்ளார் அவர்.

பலருடைய வேண்டுகோளுக்கு இணங்கி, தமது 85ஆவது வயதில் 'என் சரித்திரம்' என்னும் தலைப்பில் தம் வரலாற்றையும் எழுதி வெளியிட்டார் உ.வே.சா. அந்நூல் 'தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாதையரின் சரித்திரம் மட்டுமன்று; அது தமிழின் சரித்திரம்; தமிழுணர்வு கொண்டோர் படித்தறிய வேண்டிய தமிழ்ப் பண்பின் சரித்திரம்'.

## விருதுகள்

பழந்தமிழ் இலக்கியங்களுக்கு உ.வே.சா. செய்துள்ள அளப்பரிய தொண்டுகளைப் பாராட்டி, அரசாங்கம் அப்பெருமகனார்க்கு அவரது ஐம்பத்தோராவது வயதில், 'மகாமகோபாத்தியாயர்' என்னும் பட்டத்தை அளித்தது; அறுபத்திரண்டாவது வயதில் 'பாரத தர்ம மண்டல்' அவருக்குத் 'திராவிட வித்தியாபூஷணம்' எனும் பட்டத்தை வழங்கிக் கௌரவித்தது. காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் உ.வே.சா.வின் எழுபதாவது வயதில் 'தாக்ஷிணாத்திய கலாநிதி' என்னும் பட்டத்தைத் தந்து பாராட்டினார். சென்னைப் பல்கலைக்கழகம் 1932-ஆம் ஆண்டு அவருக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கிப் போற்றியது.

> *அவர்க்கொரு பெருமிதமிக்க மதிப்பீடு 'ஏடு காத்த ஏந்தல்' என்பது, ஏன்? கொலம்பசு புத்துலகம் காணவில்லை எனினும் பிறரொருவர் கண்டிருப்பார். ஆனால், உ.வே.சா. பழந்தமிழ் ஏடுகளைக் கண்டிராவிடின் நாம் கண்டடையவும் கூடுமோ? விறகு தலையன் போல அவர் ஏடு சுமந்த பேற்றுக்குத் தமிழுலகம் கடப்பாடுடையது.*[11]

என்பது பாவாணர் பாராட்டு.

இந்திய விடுதலைப் போராட்ட வீரரும், மாபெரும் தமிழ்க் கவிஞரும், தேசியவாதியும், எழுச்சி மிக்க பாடல்களால் இந்திய மக்களைத் தட்டி எழுப்பி, விடுதலை வேட்கையை ஊட்டிய மகாகவி

சுப்பிரமணிய பாரதியார், உ.வே.சாமிநாத ஐயரைக் 'கும்பமுனி' - அதாவது கும்பகோணத்தைச் சார்ந்த தமிழ் முனிவர் – என்று பாராட்டித் 'தமிழ் உள்ளளவும் வாழ்க' என வாழ்த்துப் பாடியுள்ளார். 'நீ ஒரு ஒளி மிகுந்த துருவ நட்சத்திரமாக என்றென்றும் வாழ்வாய்' என்றும், 'கவிஞர்கள் உன்னைப் பாடிப் பரவுவர்' என்றும், 'தமிழ் மக்கள் உன்னை வாழ்த்தி வணங்குவர்' என்றும் பாரதியார் உள்ளம் களி கூர வாழ்த்தியுள்ளார்:

*பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்*
*காலமெலாம் புலவோர் வாயில்*
*துதியறிவாய், அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்,*
*இறப்பின்றித் துலங்கு வாயே!*[12]

கும்பகோணம் கல்லூரியில் 23 ஆண்டுகள் பணியாற்றிய பிறகு, 1903-ஆம் ஆண்டில் சென்னை மாநிலக் கல்லூரியில் சேர்ந்தார் உ.வே.சா. 1919-இல் பணி ஓய்வு பெற்ற பின்னும் கூட, அவர் தமிழ் ஆசிரியர் பணியைத் தொடர்ந்தார்; 1924 முதல் 1927 வரை மீனாட்சி தமிழ்க் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றினார். அவருடைய எஞ்சிய காலத்தில், நூல் வெளியீட்டாளரானார். உ.வே.சா.வின் இறுதிக் காலத்தின் போது இரண்டாம் உலகப் போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. அதனால் சென்னையிலிருந்து திருக்கழுக்குன்றத்திற்குச் சென்று வாழத் தலைப்பட்டார். காலம் கடந்தும் புகழப்படும் ஓர் உயர்ந்த வாழ்க்கையை வாழ்ந்து முடித்த 'தமிழ்த்தாத்தா' மிகக் குறுகிய காலமே நோய் வாய்ப்பட்டு, 1942-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 28-ஆம் நாள் திருக்கழுக்குன்றத்தில் இம் மண்ணுலகைப் பிரிந்து இறைவனடி சேர்ந்தார். கவிஞர் வாலி குறிப்பிடுவதுபோல்,

*கும்பமுனி எனத் தோன்றும்*
*குடந்தைநகர் சாமிநாதா!'*
*எனப்*
*பாரதி*
*பாடிப் பரவிய*
*தமிழ்த் தாத்தா...*
*ஒருநாள்*
*வானம் போனான் -*
*வீடு தேடி அல்ல! தமிழ்*
*ஏடு தேடி!*[13]

## குறிப்புகள்

1. திரு.வி.கலியாணசுந்தரம், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள், பகுதி-1, ப.160.
2. பி.ஸ்ரீ., 'தமிழ்த் தாத்தா', நான் கண்ட தமிழ் மணிகள், ப.29.
3. குன்றக்குடி பெரிய பெருமாள், தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள், ப.132.
4. உலகுக்குத் தமிழைத் தந்த உத்தமதானபுரம், வே.சாமிநாத ஐயர், மதுமலர், ப.8.
5. திருவேங்கிமலை சரவணன், தலைநிமிர்ந்த தமிழர்கள் பாகம் 2, ப.37.
6. குன்றக்குடி பெரியபெருமாள், மு.நூ., ப.133.
7. மேற்கோள்: மதுமலர், ஜுலை-செப்.06 இதழ். ப.9.
8. இரா.இளங்குமரனார், 'உ.வே.சாமிநாதையர் தமிழ்த்தாத்தா', நினைக்கப்பட வேண்டியவர்கள், ப.193.
9. திரு.வி.க. திரு.வி.க., வாழ்க்கைக் குறிப்புக்கள், ப.160.
10. திரு.வி.க., திரு.வி.க.வாழ்க்கைக் குறிப்புகள், ப.160.
11. நினைக்கப்பட வேண்டியவர்கள், ப.194.
12. மகாமகோபாத்தியாய வாழ்த்து, பாரதியார் பாடல்கள், ப.247.
13. வாலி, தமிழ்த் தாத்தா, இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள், ப.35.

# 2. உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பு நெறி

*நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு*
*ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்*
*கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறமென்று*
*இத்திறத்த எட்டுத் தொகை*

என்னும் பழைய வெண்பா ஒன்று, எட்டுத்தொகை நூல்கள் இவை இவை எனக் குறிப்பிடுகின்றது. இவற்றுள் ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை என்ற நூல்கள் அகப்பொருள் பற்றியன. புறநானூறும், பதிற்றுப்பத்தும் புறப்பொருள் பற்றியன. பரிபாடல் என்னும் நூல் அகம், புறம் என்ற இரண்டையும் இணைத்து இனிது எடுத்துரைக்கின்றது.

ஐங்குறுநூறு அகனைந்திணையுள் ஒவ்வொன்றுக்கும் நூறு நூறு செய்யுட்கள் அமைய ஓரம்போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் ஆகியோரால் பாடப்பட்ட 500 பாட்டுக்களைக் கொண்டது. மூன்றடி முதல் ஆறடிக்கு உட்பட்ட பாக்களை உடையது. குறுந்தொகை நாலடிச் சிற்றெல்லையையும் எட்டடிப் பேரெல்லையையும் உடைய அகவற்பாக்களையும், நற்றிணை ஒன்பதடி முதல் பன்னிரண்டு அடிகள் வரை கொண்ட பாடல்களையும், அகநானூறு 13 முதல் 31 அடிகள் வரை கொண்ட பாடல்களையும் கொண்டுள்ளன. இவ்வமைப்பை நோக்குமிடத்து, பல புலவர்கள் பாடிய தனித்தனிப் பாடல்களைப் பிற்காலத்தவர் அடியளவால் வகைப்படுத்தித் தொகுத்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

> *இத்தொகை முடித்தான் பூரிக்கோ. இத்தொகை பாடிய கவிகள் இருநூற்றைவர். இத்தொகை நாலடிச் சிற்றெல்லையாகவும் எட்டடிப் பேரெல்லையாகவும் தொகுக்கப்பட்டது.*[1]
>
> என்பன இந்நூல் எழுதியுள்ள சுவடிகளில் காணப்படுகின்றன.

என்று குறிப்பிடுகிறார் உ.வே.சா. இத்தொகையைத் தொகுப்பித்தார் இன்னார் என்று தெரியவில்லை; உப்பூரிகுடி கிழாராக இருக்கலாம் என்பர். 'நல்ல குறுந்தொகை' என்று சிறப்பிக்கப்பெறும் இந்நூல், உரையாசிரியர்களால் மிகுதியாக மேற்கோள் காட்டி எடுத்தாளப்பெற்ற சங்க நூல் ஆகும். இந்நூலுக்கு, 380 பாடல்களுக்குப் பேராசிரியர்

உரை வரைந்தார் என்றும், இருபது பாடல்களுக்கு நச்சினார்க்கினியர் உரை வரைந்தார் என்றும் கூறப்படுகிறது. இதனை, நச்சினார்க்கினியர் உரைவகுத்த நூல்களைத் தொகுத்துரைக்கும் செய்யுள்,

*பாரத்தொல் காப்பியம் பத்துப்பாட் டுங்கலியும்*
*ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்கும் - சாரத்*
*திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்*
*விருத்திநச்சி னார்க்கினிய மே*[2]

என்று குறிப்பதனால் அறியலாம். மிகச் சிறந்த இரண்டு உரையாசிரியர்களால் எழுதப்பட்ட பழைய உரைகள் இப்பொழுது கிடைக்கவில்லை. இது தமிழர்களுக்கு நேர்ந்த தவக்குறைவே ஆகும்.

## குறுந்தொகை உரை எழுந்த வரலாறு

உ.வே.சா. சீவக சிந்தாமணியைப் பதிப்பிக்கும் பொருட்டு ஆராய்ந்து வருமிடத்து, அந்நூல் உரையில் மேற்கோளாக எடுத்தாளப்பெற்ற பல செய்யுட்களையும், செய்யுட் பகுதிகளையும், இன்னின்னவை இன்னின்ன நூல்கள் என்று அறிய முடியாத சூழ்நிலையே இருந்தது. ஏனெனில் சங்க இலக்கிய நூல்களைப் பலரும் அறியவில்லை; பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் உரையாசிரியர்கள் மேற்கோள் காட்டிய சிற்சில பாடல்களையும் பகுதிகளையும் மட்டுமே அறிந்திருந்தனர். இந்நிலையில், உ.வே.சா.வுக்குத் திருவாவடுதுறைப் புத்தகசாலையில் இருந்து ஓர் ஏடு கிடைத்தது. அது கலித்தொகை, பரிபாடல் தவிரப் பிற ஆறு நூல்கள் அமைந்த எட்டுத்தொகை ஏடு ஆகும். மேலும் பல இடங்களிலும் ஏடு தேடி அலைந்தபோது, சங்க இலக்கியங்கள் அடங்கிய 9 ஏட்டுப்பிரதிகள் உ.வே.சா.வுக்குக் கிடைத்தன. அவையாவன:

1. திருநெல்வேலி ஸ்ரீ அம்பலவாண கவிராயரவர்கள் ஏட்டுப் பிரதி
2. மந்தித்தோப்பு மடத்தில் கிடைத்த ஏட்டுப் பிரதி
3. செங்கோல் மடத்தில் கண்ட குறையான ஏட்டுப் பிரதி
4. திருமயிலை வித்துவான் ஸ்ரீ சண்முகப்பிள்ளையவர்கள் கடிதப் பிரதி
5. சோடசாவதானம் ஸ்ரீ சுப்பராய செட்டியாரவர்கள் ஏட்டுப் பிரதி
6. தொழுவூர் ஸ்ரீ வேலாயுத முதலியாரவர்கள் ஏட்டுப்பிரதி
7. சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலை ஏட்டுப்பிரதி
8. புதுக்கோட்டை ஸ்ரீ ராதா கிருஷ்ணையரவர்கள் கடிதப் பிரதி
9. திருக்கோணமலை ஸ்ரீதி.த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் கடிதப் பிரதி.

இப்பிரதிகள் அனைத்தும் எழுதுவோரால் நேர்ந்த பிழைகள், மாற்றங்கள் கொண்டனவாய் விளங்கின. உ.வே.சா. குறுந்தொகைப் பிரதிகள் அனைத்தையும் ஒப்புநோக்கிய பிறகு, தொல்காப்பிய உரை முதலியவற்றைப் படித்தார்; அவ்வுரைகளில் மேற்கோளாக ஆளப்பட்ட குறுந்தொகைச் செய்யுட்களையும், செய்யுட் பகுதிகளையும் தொகுத்தார்; அவற்றில் கண்ட பாட பேதங்களைக் குறித்துக் கொண்டார்; இம் முயற்சியால் பல அருமையான திருத்தங்கள் அவருக்குக் கிடைத்தன; பல ஐயங்களும் நீங்கின. பின்னர், குறுந்தொகையின் மூலத்தில் காணப்படும் அரும்பதங்கள், சொற்றொடர்கள், உவமைகள், செய்திகள் முதலியவற்றிற்கு ஓர் அகராதியும், புலவர் பெயர்களுக்கு ஓர் அகராதியும் தொகுத்தார். இங்ஙனம் பல வகையான குறிப்புக்களும், அகராதிகளும் தொகுத்த பின்னர்ப் பொருள் வரையறை செய்யத் தொடங்கினார். அப்பணி முடிந்து, அச்சிட்டு வெளியிடலாம் என எண்ணியிருந்த வேளையில், வாணியம்பாடி பள்ளியில் தமிழ்ப்பண்டிதராக இருந்த தி.சௌ.அரங்கசாமி ஐயங்கார் என்பவர் குறுந்தொகைக்கு உரை எழுதி 1915-ஆம் ஆண்டு, அதைப் பதிப்பித்து வெளியிட்டிருந்தார். இதனால், உ.வே.சா.வின் ஊக்கம் சிறிது தளர்ந்தது. 1933-ஆம் ஆண்டு, புரசைவாக்கம் ஸர்.எம்.ஸிடி. உயர்நிலைப்பள்ளித் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் வித்மான் சோ. அருணாசல தேசிகர் குறுந்தொகை மூலத்தை மட்டும் பதிப்பித்து வெளியிட்டார். பழைய உரைகளும், தி.சௌ.அரங்கசாமி ஐயங்காரின் உரையும் கிடைக்கப் பெறாத சூழ்நிலையில், குறுந்தொகைக்கு உரை எழுதவேண்டிய தேவை ஏற்பட்டது. 1934-ஆம் ஆண்டுத் தமிழ்ப் பாடப் புத்தகசபையின் தலைவராக இருந்த டி.சிவராம சேதுப்பிள்ளையவர்கள், குறுந்தொகைப் பதிப்பிற்கு உதவ முன்வந்தார்; அவருடைய ஆதரவினாலும், பல ஆண்டுகள் உழைத்துத் தொகுத்த குறிப்புகள் வீணாகாமல் இருக்கும் பொருட்டு, மீண்டும் இந்நூலை வெளியிடவேண்டும் என்னும் முயற்சியை மேற்கொண்டார் உ.வே.சா.

உ.வே.சா. குறுந்தொகை நூலைப் பதிப்பித்து வெளியிட்ட பொழுது, அவரது வயது 82 ஆகும்.

> *பல வருஷங்களாக முயன்று படித்துப் பலருடைய உதவியைப் பெற்று ஆராய்ந்து ஆராய்ந்து சுவைத்துப் பார்த்த இந்நூல் இப்பொழுது இந்த உருவத்தில் வெளிவருவதைப் பார்க்கையில் எனக்கு உண்டாகும் இன்பம் எழுதி உணர்த்தற்கரியது. தமிழ் அன்னையின் திருவடித் துணைகளில் இப்பதிப்பும் ஒரு மணமற்ற சிறு மலராகவேனும் கிடந்து நிலவும் என்பது எனது கருத்து.*

என்னும் குறிப்புடன் 1937-ஆம் ஆண்டு முதல் பதிப்பாகக் குறுந்தொகை வெளிவந்துள்ளது. 'ஒரு மணமற்ற சிறு மலராகவேனும்' என உ.வே.சா.வால் குறிப்பிடப்படும் இக் குறுந்தொகைப்பதிப்பு நூல், தமிழ்த்தாத்தாவின் கல்விப் பெருக்கினையும், அயராத உழைப்பினையும், ஆராய்ச்சித் திறத்தினையும், உரைக்குறிப்பு எழுதுவதில் அவருக்கு உள்ள திறமையையும் புலப்படுத்துகின்றது. அறிஞர் வ.சுப. மாணிக்கம், உ.வே.சாவைப் 'பதிப்பின் வேந்து' எனப் போற்றுகின்றார்; அவரது சங்க நூற் பதிப்பும், பிற நூற்பதிப்பும் ஆய்வியல் மாணாக்கர்க்குப் பெரும்பயன் சுரப்பன எனக் கூறுகின்றார்.[3]

> *தமிழ்நூற் பதிப்புக்களில் நாம் நம்பிக்கையாகக் கொள்ளக்கூடிய பதிப்புக்கள் ஐயருடைய பதிப்புக்களே. இவர் ஒன்று எழுதி வைத்தால், அது பெரும்பாலும் தவறாக மாட்டாது; எனவே, எப்பொழுதும் நம்மால் கொள்ளத்தக்கது இவருடைய ஆழ்ந்த கல்வியும், தெளிந்த தமிழ் அறிவும், பரந்த உலகியலுணர்ச்சியும், இவற்றைத் தமிழ் மக்களுக்கு நூல் வாயிலாகப் பயன்படுத்தும் சீரிய முறையும் நம்மால் என்றென்றும் போற்றத்தக்கன.*[4]

என ஐயரின் பதிப்புத் திறனைப் பேராசிரியர் எஸ்.வையாபுரிப்பிள்ளை நெஞ்சாரப் பாராட்டுகின்றார்.

## குறுந்தொகைப் பதிப்பு முறை

> *பதிப்பாசிரியருக்குரிய குணங்களுள் இன்றியமையாத தாகவும் நான் கருதுவது, கண்ட விஷயத்தைக் கண்டபடி வெளியிடுவதேயாகும். பிழையான வடிவத்தை வெளியிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. பழைய பிரதிகளில் காணப்படும் வடிவத்தை நன்றாகப் பரிசோதித்து, ஒன்றோடொன்று ஒப்பிட்டு ஆராய்ந்து அதன் மெய்வடிவத்தை வெளியிடுவதுதான் உண்மையான பதிப்பாசிரியர் செய்ய வேண்டிய வேலை. மத சம்பந்தமாயும், ஆராய்ச்சி சம்பந்தமாயும் தாம் என்ன கொள்கைகளைக் கொண்டிருந்தாலும், பிரதிகளில் அவற்றுக்கு விரோதமாயுள்ள கொள்கைகள் காணப்படுமாயினும், அவற்றைத் தம் மனம்போல மாற்றாது ஏட்டில் உள்ளபடியே வெளியிட்டு உலகத்துக்கு அளிப்பது தான் மேன்மைக்குணம்.*

*சிற்சில ஆராய்ச்சியாளர்களும் பதிப்பாசிரியர்களும் சில விஷயங்களை மறைத்தும் சில விஷயங்களை அஞ்சாது மாற்றியும் தம்முடைய கொள்கைகளை நிலைநிறுத்த முயன்றிருக்கிறார்கள். ஏட்டுப் பிரதிகளைப் பெயர்த்தெழுதுவோரும் கூசாது கவிஞன் எழுதிய செய்யுளை மாற்றி அமைத்திருக்கிறார்கள்; புதியனவாகச் செய்யுட்களைச் சேர்த்திருக்கிறார்கள்; சில செய்யுட்களை விட்டும் இருக்கிறார்கள். ஐயரவர்கள் அப்படிச் செய்ததே கிடையாது. ஏட்டில் கண்ட வடிவத்தை, தாம் சோதித்துத் துருவித்துருவி ஆராய்ந்த மெய்வடிவத்தை, உள்ளபடியே வெளியிடுவதைத் தம்முடைய விரதமாகக் கொண்டிருக்கிறார்கள். இதை அவர்கள் பல முறை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். உதாரணமாக சீவக சிந்தாமணியின் முகவுரையில் 8-ஆம் பக்கத்தில்,*

*'புராதனமான தமிழ் நூல்களும் உரைகளும் பண்டை வடிவங் குன்றாதிருத்தல் வேண்டுமென்பதே எனது நோக்கமாதலின் பிரதிகளில் இல்லாதவற்றைக் கூட்டியும், உள்ளவற்றை மாற்றியும் குறைத்தும் மனம் போனவாறே அஞ்சாது பதிப்பித்தேனல்லேன்; ஒருவகையாகப் பொருள் கொண்டு, பிரதிகளில் இருந்தவாறே பதிப்பித்தேன். யானாக ஒன்றுஞ் செய்திலேன்' என்றும், பெருங்கதையின் முகவுரையில் 22-ஆம் பக்கத்தில், 'பழைய நூல்கள் பழைய வடிவத்தினின்றும் வேறுபடாமல் இருக்க வேண்டுமென்பதே எனது முழு நோக்கமானதால் எவ்வளவு உழைக்க வேண்டுவதோ அவ்வளவுதூரம் உழைத்து இப்பதிப்பு நிறைவேற்றப் பெற்றது; என்னையறியாமல் பிழைகள் நேர்ந்திருக்கலாம்; அவை நாளடைவில் திருத்தமடைதல் கூடும்' என்றும் தெளிவாகச் சொல்லி யிருக்கிறார்கள். பழைய நூல்களின் உண்மை வடிவத்தை வெளியிடுவதே உண்மைப் பதிப்பாசிரியரின் கடமை எனக் கொண்டு நூல்களைப் பதிப்பித்தவர் உ.வே.சா.*

எனக் குறிப்பிடுகிறார் பெ.நா.அப்புஸ்வாமி.[5]

குறுந்தொகை முதற் பதிப்பில் முகவுரை, நூலாராய்ச்சி, பாடினோர் வரலாறு, குறுந்தொகை மூலமும் உரையும், செய்யுள்

முதற்குறிப்பகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி, இப்பதிப்பில் எடுத்தாண்ட நூல்கள், நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப் பகராதி என எட்டுக் கூறுகள் 'இப்புத்தகத்தில் அடங்கியவை' என்னும் பகுதியில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. முகவுரையில் உ.வே.சா. குறுந்தொகைப் பதிப்பில் தாம் கையாண்ட சில முறைகளையும் எடுத்துரைக்கின்றார். அவையாவன: 1.கூற்று 2.கூற்று விளக்கம் 3.மூலம் 4.பிரதிபேதம் 5.பழைய கருத்து 6.ஆசிரியர் பெயர்கள் 7.பதவுரை 8.முடிபு 9.கருத்து 10.விசேடவுரை 11.மேற்கோளாட்சி 12.ஒப்புமைப் பகுதி.

## 1. கூற்று

ஒவ்வொரு பாடலின் தலைப்பிலும், இன்னார் கூற்று என்பதைக் குறிப்பிட்டுள்ளார் உ.வே.சா.

> *திணைப் பெயரைத் தலைப்பிடுதல் அகநானூற்றிற் கண்டதாயினும், பொருளில் கருத்துச் செல்வதற்கு இம்முறை தக்கதென்று தோற்றியது. அன்றியும், தொல்காப்பியத்தில் கூற்று வகையாகச் சூத்திரங்கள் வகுக்கப்பட்டிருத்தலும் இங்ஙனம் அமைக்கும் கருத்தை உண்டாக்கியது. சில செய்யுட்களில் இரண்டு பழைய கருத்துக்கள் இருக்கின்றன. அவற்றில் முதற்கருத்தின்படியே கூற்று அமைக்கப்பட்டது.*[6]

என்று தாம் கூற்று அமைத்த தன்மையை விளக்கிச் செல்கின்றார் அவர். குறுந்தொகையின் எட்டாவது பாடல் 'காதற்பரத்தை கூற்று' என்று தலைப்பிடப்பட்டுள்ளது.

> *கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்*
> *பழன வாளை கதூஉம் ஊரன்*
> *எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்*
> *கையுங் காலுந் தூக்கத் தூக்கும்*
> *ஆடிப் பாவை போல*
> *மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே (குறுந். பா.8)*

என்பது 'கிழத்தி, தன்னைப் புறனுரைத்தாளெனக் கேட்ட காதற்பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது'[7] என்னும் விளக்கத்துடன் பாடல் அமைக்கப்பட்டிருக்கின்றது.

> *அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்*
> *பருவிலைக் குளவியொடு பசுமரல் கட்கும்*

*கடுங்கண் வேழத்துக் கோடுநொடுத் துண்ணும்*
*வல்வில் ஓரி கொல்லிக் குடவரைப்*
*பாவையின் மடவந் தனளே*
*மணத்தற் கரிய பணைப்பெருந் தோளே (குறுந்.100)*

என்பது '1.பாங்கற்கு உரைத்தது. 2.அல்ல குறிப்பட்டு மீள்கின்றான், தன் நெஞ்சிற்குச் சொல்லியது' என்று இரண்டு வகையான கூற்றுக்களைப் பெற்று அமைந்துள்ளது குறுந்தொகையின் 100-வது பாடல். இப்பாடலுக்கு, 'தலைவன் கூற்று' என்று தலைப்பிட்டிருக்கும் உ.வே.சா., தலைவன் பாங்கனுக்கு 'யான் ஒரு மலைவாணர் மகளைக் காமுற்றேன்; அவள் பெறுதற்கரியள்' என்று கூறியது என்று முதல் கூற்றின் அடிப்படையில் கூற்று விளக்கம் தந்து செல்கின்றார்.

*பாவடி யுரல பகுவாய் வள்ளை*
*ஏதின் மாக்கள் நுவறலு நுவல்ப*
*அழிவ தெவன்கொல்இப் பேதை யூர்க்கே*
*பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்*
*கருங்கண் தெய்வம் குடவரை யெழுதிய*
*நல்லியற் பாவை யன்னஇம்*
*மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே (குறுந்.89)*

என்னும் பரணரின் பாடல் இரண்டு வகையான கூற்றுக்களைப் பெற்றுள்ளது:

(1) தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.

(2) தலைமகற்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லி வாயின் மறுத்ததுமாம்.

இப்பாடலுக்குத் 'தோழி கூற்று' என்று தலைப்பிட்ட உ.வே.சா. இரண்டு வகையான கூற்றுக்களில், முதல் கூற்றுக்குப் பொருந்தும் வகையில், 'தலைவி தலைவன் பெயரை வள்ளைப்பாட்டில் அமைத்துப் பாடினாளாக அதனைக் கேட்ட ஊரினர் அலர் தூற்றுதலைத் தோழி தலைவன் சிறைப்புறத்திலிருக்கும் பொழுது புலப்படுத்தி, விரைவில் வரைதல் நலமென்பதை உணர்த்தியது' என்று கூற்று விளக்கம் அளித்துள்ளார் உ.வே.சா.[8]

## 2. கூற்று விளக்கம்

உ.வே.சா. அளிக்கும் கூற்று விளக்கம் பழைய கருத்தையும், செய்யுட் பொருளையும் இணைத்துச் சுருக்கமாக வரையப்பட்டுள்ளது. இரண்டு கூற்று உள்ள பாடல்களுக்கு முதற் கருத்துக்கே விளக்கம் அளித்துள்ளார் உ.வே.சா.

*காலே பரிதப் பினவே கண்ணே*
*நோக்கி நோக்கி வாளிழந் தனவே*
*அகலிரு விசும்பின் மீனினும்*
*பலரே மன்றஇவ் வுலகத்துப் பிறரே* (குறுந். 44)

என்னும் பாடல், 'இடைச்சுரத்துச் செவிலித்தாய் கையற்றுச் சொல்லியது' என்னும் கூற்றில் அமைந்துள்ளது. இதற்கு, 'தலைவி தலைவனுடன் போனபின்பு அவர்களைப் பாலை நிலத்திற்றேடிச் சென்ற செவிலி அவர்களைக் காணாமல் வருந்திக் கூறியது' (ப.98) எனக் கூற்று விளக்கம் அளித்துள்ளார் உ.வே.சா.

> *நோக்கி நோக்கி யென்றதற்கேற்ப நடந்து நடந்தென்பது வருவித்துரைக்கப்பட்டது. முதுமையையுடையளாத லினாலும் பாலைநிலம் நடத்தற்கு அரியதாதலினாலும் நடந்து நடந்து செவிலிக்குக் கால் ஓய்ந்தன... பொருள்களை நெடுநேரம் வெயிலில் கூர்ந்துநோக்கின் கண்ஒளி மழுங்குதல் இயல்பு. பாலையில் நெடுந் தூரத்தில் ஆணும் பெண்ணுமாக இணைந்துடன் வருவாரை நோக்கி, 'இவர் நம் மகளும் அவள் தலைவனும் போலும்' என்று எண்ணி அவரையே கூர்ந்து நோக்கி அணிமையில் வர, அவரல்லரென்பதை அறிந்து பின்னும் இங்ஙனம் வருவாரை இப்படியே நோக்கி நோக்கிச் செவிலி மனம் வெறுத்தாள்.*[9]

என்று தாயின் ஏக்கத்தைப் புலப்படுத்தும் வகையில் உரை எழுதிச் செல்கின்றார் உ.வே.சா.

## 3. மூலம்

நூல்களைப் பதிப்பிக்கும் பணி என்பது எளிய செயல் அன்று; ஏட்டுச் சுவடியில் எழுதுவோர் பொருளறியாக் குறையால் நேர்ந்த பிழைகளும், அதனைப் பிரதி எடுக்கும்போது, பிரதி செய்வோர்களால் நேர்ந்த பிழைகளும் நீக்கி, சரியான மூலம் கண்டறிவது அரிதினும் அரிதான செயல். குறுந்தொகைப் பிரதிகள் பலவற்றை ஆராய்ந்த உ.வே.சா. அனைத்தையும் ஒப்புநோக்கிய பிறகு, தொல்காப்பிய உரை முதலியவற்றைப் படித்து அங்கங்கே மேற்கோளாக ஆளப்பட்ட இந்நூற் செய்யுட்களையும், செய்யுட் பகுதிகளையும் தொகுத்து அவற்றில் கண்ட பாட பேதங்களையும் ஆராய்ந்து, பொருட்சிறப்புடைய பாடங்களையே கொடுத்துச் சென்றிருக்கிறார். ஏட்டுச் சுவடிகளாலும், உரையாசிரியர்கள் உரைகளில் காட்டிய மேற்கோள் பகுதிகளாலும்

தெரிந்த பாடல்களுள் முக்கியமானவை அடிக்குறிப்பில் குறித்துச் செல்கின்றனார் உ.வே.சா. சில சான்றுகள் வருமாறு:

*அள்ளூர் நன்முல்லை(பி-ம். அள்ளூர் நன்மூலன்) (ப.301)*

*திப்புத் தோளார் (பி-ம். திப்புத்தேளார்) (ப.4)*

*'தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்*
*படிவ வுண்டிப் பார்ப்பன மகனே*
*எழுதாக் கற்பி னின்சொ லுள்ளும் (குறுந். 156)*

என்னும் குறுந்தொகைப் பாடல் வரிகளில் மூன்று பாட பேதங்களைக் குறித்துள்ளார் உ.வே.சா.

1. தாழ்கமண்டலத்துப் - தாழ்மண்டிலத்துப்
2. படிவ - படிம
3. னின்சொலுள்ளும் - னின் செயலுள்ளும்

கழறொடிச் சேஎய் - கழறொடீஇ (ப.4)
முனிவின்று - முனிவின்றி (ப.17)
ஓர்யான் - ஓவுயான், ஓரியான்

## அடிக்குறிப்புச் செய்திகள்

*கன்று முண்ணாது கலத்தினும் படாது*
*நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்கு*
*எனக்கும் ஆகாது என்ஐக்கும் உதவாது*
*பசலை யுணீஇயர் வேண்டும்*
*திதலை அல்குலென் மாமைக் கவினே (குறுந்.27)*

என்னும் பாடலின் ஆசிரியர் கொல்லன் அழிசி என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இப்பாடலுக்கு உரை வரையுமிடத்து, 'முடிவு' பகுதியில் 'இதுவெள்ளிவீதியார் பாட்டு; இது தம் பெயர் கூறின் புறமாமென்று 'அஞ்சி வாளாது கூறினார்' (தொல்.அகத்.54.ந.) என்னும் நச்சினார்க்கினியரின் உரைக்குறிப்பை எடுத்துக்காட்டும் உ.வே.சா. அடிக்குறிப்பில்,

> குறுந்தொகை 26-ஆம் செய்யுளை இயற்றிய ஆசிரியர் பெயர் வெள்ளிவீதியார் என்றும், இப்பாட்டின் ஆசிரியர் பெயர் கொல்லனழிசி என்றும் பிரதிகளில் உள்ளன; நச்சினார்க்கினியர் கூற்றால் இவ்விரண்டும் மாறி எழுதப்பட்டதாகக் கொள்ள வேண்டும் என்று தோன்றுகின்றது (ப.65)

என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறு ஐயத்திற்குரிய பகுதியை அடிக்குறிப்பில் குறித்துச் செல்லும் போக்கு உ.வே.சா.விடம் காணப்படுகின்றது.

## 4. பிரதிபேதம்

ஏடு பெயர்த்து எழுதும் போது ஓர் எழுத்து, பிறிதொரு எழுத்தாக எழுதப்படுவதும், எழுத்து தெரியாதபோது, தாமே ஊகித்து எழுதுவதனாலும் பல பிழைகள் ஏற்படுவது உண்டு.

> 'பழம் பிரதிகளில் ஈகார ஏகாரங்களின் பின்னர் யகரவொற்று எழுதப்பட்டிருந்தது.... சில இடங்களில் இவ்விரண்டுமே காணப்படும். மகர ழகரங்கள், ழகர ளகரங்கள், ககர, சகர, தகரங்கள், தந்நகர றன்னகரங்கள், லகர றகரங்கள், ரகர நகரங்கள் என்பவை ஒன்றுக்கொன்று மாறாக எழுதப்பட்டிருக்கும். டு, ரு, கு என்பனவும், அ, கு, சு என்ற மூன்றும் தமக்குள் வேற்றுமை தெரியாதபடி இருந்தன. ற்ற என வரும் இடங்களில் த்த என்ற பாடம் காணப்பட்டது. ஓரிடத்தில் காசினை என்பதில் கா என்னும் எழுத்து, தூ என மாறி அதன்பின் ஒரு சகர ஒற்றுத் தோன்றித் தூச்சினை என்று எழுதப்பட்டிருந்தது. இங்ஙனம் பல பிரதிகளிலும் காணப்பட்ட பாடங்களையும் அவற்றின் மாறுபாட்டின் வரலாற்றையும் விரிக்கின் மிகப் பெருகும்' (முகவுரை, ப.xix)

என்று உ.வே.சா. முகவுரையில் குறிப்பிட்டுச் செல்வது, பாடபேதம் கண்டறிவதில் நேரும் சிக்கல்களை எடுத்துக்காட்டுகிறது.

## 5. பழைய கருத்து

ஒரே சொல்லுக்குப் பல பொருள் கூறப்படுமிடத்து, பொருத்தமில்லாத சொற்களை நகவளைவுக்குள் காட்டியும், சில கடினமான சொற்களுக்கான பொருளை இருதலைப் பகரத்துள் அமைத்தும் உரை எழுதிச் செல்கின்றார் உ.வே.சா. சில செய்யுட்களுக்கு இரண்டு கருத்துக்கள் இருப்பதையும் சுட்டிச் செல்கின்றார் அவர்.

## 6. ஆசிரியர் பெயர்கள்

குறுந்தொகைப் பாடல்களைப் பாடிய புலவர்களின் பெயர்கள் ஏட்டுச் சுவடிகளில் காணப்பட்டது போலவே, நூலிலும்

குறிக்கப்பட்டிருக்கின்றன. பாடல்களைப் பாடிய புலவர்களின் பெயர்கள், அப்பாடலில் இல்லாதவிடத்து, பாடலில் காணப்படும் உவமைகளால் சிறப்புப் பெயர் பெறுவதையும், ஊர், சாதி, தொழில், உறுப்புக்குறை முதலிய சிலவற்றை அவர்களுடைய பெயர்களில் இருந்தே அறிய முடிவதனையும் உ.வே.சா. தம் உரை விளக்கத்தில் குறித்துச் சென்றுள்ளார். குறுந்தொகைப் பாடலாசிரியர் பெயர்களை எட்டு வகையாகப் பகுத்து விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா. அவையாவன:

1. இயற்பெயரும் சிறப்புப் பெயரும் ஒருங்கே அமைதல்
2. சிறப்புப் பெயரால் அழைக்கப்படுதல்
3. ஊர்ப்பெயருடன் சேர்த்துக் கூறப்படுதல்
4. சாதியுடன் குறிப்பிடப்படுதல்
5. தொழிலால் குறிப்பிடப்படுதல்
6. உறுப்பால் பெயர் பெறுதல்
7. மக்களிடையே மிகுதியாக வழங்கப் பெறும் வழக்காற்றின் அடிப்படையில் பெயர் பெறுதல்
8. பிற பெயர்கள்

## இயற்பெயரும் சிறப்புப் பெயரும் ஒருங்கே அமைந்த புலவர்கள்

1. நெய்தல் கார்க்கியர் – நெய்தல் திணையைப் பாடும் ஆற்றல் வாய்ந்தமையின் நெய்தல் கார்க்கியர் என்று வழங்கப்படு கின்றார் (55, 212).

2. பெருங்கடுங்கோ என்பவர் ஓர் அரசர். தமிழ்ப் புலமையில் சிறந்தவர்; அவர் பாலை நிகழ்ச்சிகளைப் பாடுதலில் வீறு பெற்றவராதலின் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்ற பெயரால் வழங்கப்படுகின்றார்.

3. கோவேங்கைப் பெருங்கதழ்வன் என்பது ஒரு புலவரின் பெயர். தம்பாடலில் (14) கல்லின் இடையே முளைத்த வேங்கை மரத்தின் பூவை உடைய கிளையை அருவி தாக்கும் காட்சியைப் பாடியதால் இப்பெயர் பெற்றார் என்று கருத இடம் உண்டு.

4. மாதங்கீரனார் என்னும் புலவர் மடல் ஏறும் செய்திகளைத் தம் பாடலில் (182) பாடுவதால், மடல் பாடிய மாதங்கீரன் என்று குறிக்கப்படுகின்றார்.

5. நச்செள்ளையார் என்ற புலவர் காக்கையைப் பற்றிப் பாராட்டிப் பாடினமையால் காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்று சிறப்பிக்கப் பெற்றார்.

## சிறப்புப் பெயர் மாத்திரம் தெரியும் புலவர்கள்

இயற்பெயர் அறியப்படாத குறுந்தொகைப் புலவர்களுள் பதின்மூன்று பேர் தாம் பாடிய உவமை நயத்தால் பெயர் பெற்றுள்ளனர்.

பசிய இலையினின்றும் மேலெழும் நெய்தல் பூ கழியில் வெள்ளம் மிகும்போதெல்லாம் கயத்தின் கண்ணே மூழ்கும் மகளிருடைய கண்ணை ஒக்கும்[10] என்று பாடிய புலவர் *'கயமனார்'* என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகிறார்.

தலைவனும் தலைவியும் ஒன்றுபட்டு உள்ளப் புணர்ச்சி உற்றதை,

*செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே (பா.40)*

என்று உவமை கூறியதால், அவ்வுவமையாலேயே *'செம்புலப்பெயல் நீரார்'* எனப் பெயர் பெற்றார் புலவர்.

அணிலாடு முன்றிலார் – தலைவன் பிரிந்த காலத்தில் பொலிவு இழந்த தலைவிக்கு மக்கள் போகிய அணிலாடு முன்றிலை உடைய இல்லத்தை உவமை ஆக்குதலின் (41) இவர் இப்பெயர் பெற்றார்.

தலைவியோடு பழகாத நாளைப் பதடிவைகல் (323) என்று சொல்வதன் காரணமாகப் *'பதடி வைகலார்'* எனப் பெயர் பெற்றார் ஒரு புலவர்.

*நெடுவெண்ணிலவினார்,* (47) மீனெறி தூண்டிலார் (54), விட்ட குதிரையார் (74), ஓரேருழவனார் (131), கூவன் மைந்தன் (224) காலெறி கடிகையார் (267) ஓரிற் பிச்சையார் (277) கள்ளிலாத்திரையனார் (293), கல்பொருசிறுநுரையார் (290), குப்பைக் கோழியார், கவைமகனார் (290), வில்லக விரலினார் (370), கங்குல் வெள்ளத்தார் (387), குறியிறையார் (394) முதலான பெயர்கள் உவமை நயம் காரணமாக ஏற்பட்ட பெயர்கள் ஆகும்.

## ஊர்ப்பெயர் சேர்த்துக் கூறப்படுதல்

பல புலவர்களின் பெயர்களோடு, அவர்களுடைய ஊர்களும் சேர்த்துச் சொல்லப்படுகின்றன. அரிசில்கிழார், அள்ளூர் நன்முல்லையார், ஆலங்குடி வங்கனார், ஒக்கூர் மாசாத்தியார், கச்சிப் பேட்டு நன்னாகையார், குடவாயில் கீரத்தனார், கோவூர் கிழார், மாங்குடி மருதனார் என 36 புலவர்கள் ஊர்ப்பெயரையும் தம் பெயருடன் இணைத்து வழங்கப்பட்டுள்ளனர். இவ்வூர்கள் தமிழ்நாட்டின் பல

பகுதிகளிலும் விரவி உள்ளனவாகத் தோன்றுகின்றன. அரிசில், அள்ளூர், ஆலங்குடி, ஆலத்தூர், இடைக்காடு, இருந்தையூர், ஈழம், உகாய்க்குடி, உரோடகம், உறையூர், ஐயூர், ஒக்கூர், கச்சிப்பேடு, கடம்பனூர், கடியலூர், கருவூர், கழார், காவிரிப்பூம்பட்டினம், கிடங்கில், கிள்ளிமங்கலம், குடவாயில், குறுங்குடி, கூடலூர், கோழி, கோவூர், சிறைக்குடி, செல்லூர், தங்கால், பெருங்குன்றூர், பொதுக்கயம், மதுரை, மாங்குடி, மாடலூர், மிளை, வெள்ளூர், வேம்பற்றூர் ஆகியன மற்றும் சில ஊர்கள் ஆகும்.

## சாதியை வெளிப்படுத்தும் பெயர்கள்

கபிலர் அந்தணர் என்பது பிற புலவர்தம் குறிப்பால் அறிய முடிகிறது. ஆரிய அரசன் யாழ்ப் பிரகத்தன், குட்டுவன்கண்ணன், நம்பிகுட்டுவன், சேரமான் சாத்தன், சேரமான் எந்தை, கோப்பெருஞ் சோழன், அண்டர்மகன் குறுவழுதி, பாண்டியன் பன்னாடு தந்தான், கொக்குளமுற்றன், கோவேங்கைப் பெருங்கதழ்வன் முதலான அரச குலப் பெயர்கள் காணப்பெறுகின்றன. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், ஆடைவியாபாரம் செய்த வணிகர் ஆவார்; வேளாளர்களுள் வேள் என்னும் பெயரால் அறியப்படும் புலவர்களும், கிழார் என்னும் பெயரால் அறியப்படுபவரும் பலர் ஆவர்; மூதெயினனார் என்னும் புலவர் மறவராகக் கருதப்படுகின்றார்.

## தொழிலால் அறியப்பட்டோர்

பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன் என்பவர் பாண்டியனுக்குப் படைத்தலைவராக இருந்தார் என்பதும், வள்ளுவன் பெருஞ்சாத்தன் என்பவர் அரசாங்கத்துச் செய்திகளை அறிவிக்கும் கருமத் தலைவராக இருந்தார் என்பதும், குலபதி நக்கண்ணனார், கணக்காயன் தத்தனார், ஆசிரியர் பெருங்கண்ணனார் முதலிய ஆசிரியர்களும், மதுரை எழுத்தாளன் சேந்தன்பூதனார் எழுதும் தொழிலினர் என்பதும், கொல்லன் அழிசி, தங்கால் முடக்கொற்றனார், மதுரைக் கொல்லன் புல்லன், மதுரைப் பெருங்கொல்லன் முதலானோர் கொல்லர் தொழில் செய்தவர் என்பதும், உலோச்சனார் உலோச் சென்னும் தொழிலையும், உறையூர் முதுகூத்தனார், வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன் முதலானோர் கூத்தாடும் தொழில் உடையார் என்பதும் அவர்தம் பெயர்களால் புலனாகின்றன.

இவற்றால் அரசர்களும், படைத்தலைவர்களும், பல்வேறு சாதியினரும், பல தொழில் செய்பவர்களும் தமிழ் மொழிப் புலமை வாய்ந்தவர்களாக விளங்கியதை அறியமுடிகிறது.

## உறுப்பால் பெயர் பெற்றவர்கள்

பெருங்கண்ணன், காரிக்கண்ணன், கொல்லிக் கண்ணன், நெடுங்கண்ணன், பூங்கண்ணன், பூங்கணுத்திரையார் முதலானவர்கள் கண்ணின் இயல்பால் பெயர் பெற்றுள்ளனர். நரிவெரூஉத்தலையார், சீத்தலைச் சாத்தனார் முதலியன தலையால் வந்த பெயர்கள். கடுந்தோட் கரவீரன், திப்புத்தோளார், பெருந்தோட்குறுஞ் சாத்தன் முதலானவர்கள் தோளால் பெயர் பெற்றவர்கள் ஆவர்; பரூஉமோவாய்ப் பதுமனார், ஐயூர் முடவனார், தங்கால் முடக் கொல்லனார் முதலான பெயர்கள் உறுப்பால் பெயர் பெற்றவர்களை உணர்த்துகின்றன.

## அடைமொழியோடு பெயர் பெற்றவர்கள்

தொல்கபிலர், இளங்கீரனார், இளம்பூதனார், குறுவழுதி, குறுங்கீரன், சிறுகந்தன், அழிசி நச்சாத்தனார், நச்செள்ளையார், நக்கீரனார், நன்முல்லையார், நன்னாகையார், நல்வேட்டனார், கடுகு பெருந்தேவன், பாரதம் பாடிய பெருந்தேவனார், பெரும்பதுமனார், மாசாத்தியார், மாமூலனார், முதுகூத்தனார் முதலான பெயர்கள் அடைமொழிகளோடு அமைந்திருப்பதைக் காணலாம்.

கொற்றன், சாத்தன், தேவன், பூதன் ஆகிய பெயர்கள் அக்காலத்தில் மக்களுக்கு மிகுதியாக இட்டு வழங்கிய பெயர்களாக இருக்கலாம்; அதனால் புலவர் பெயர்களிலும் இந்நால்வகைப் பெயர்கள் காணப்படுகின்றன என்று குறிப்பிடுகிறார் உ.வே.சா.

தெய்வப் பெயரையும், பூதத்தின் பெயரையும் உடைய புலவர்களும் இருந்திருக்கிறார்கள் என்பதற்கு இறையனார், உருத்திரன் கண்ணன், கந்தன், குமரன், சத்திநாதன், சாத்தன், தாமோதரன், தேவன், பதுமன், பேரெயில் முறுவலார், வெண்பூதி முதலான பெயர்கள் சான்று அளிக்கின்றன.

> *உறுப்புக்குறை, சாதி, தொழில் முதலியவற்றோடு சார்த்திப் புலவர்களில் சிலர் பெயர்கள் வழங்குவதை உற்று நோக்கும்போது, அவற்றாலும், பிற வகையினாலும் அவர்களுடைய கல்விப் பெருமை குறையவில்லை என்பதும், அவர்களைக் குறிக்கும் அடையாளமாகவே அத்தகைய முறை கொள்ளப்பட்டது என்பதும் புலனாகின்றன; எல்லாவற்றிலும் புலமையே தலைமைபெற்று விளங்கியது என்ற கருத்து உறுதி ஆகின்றது.*[11]

என்று புலவர்களின் பெயர்களை ஆராய்ந்து உண்மையைப் புலப்படுத்திச் செல்கின்றார் உ.வே.சா.

## 7. பதவுரை

புணர்ச்சி விதிகளுக்கேற்பப் பாடப்பட்ட சங்கப்பாடல்களை, மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம், பதம் பிரித்து எளிமையான பதவுரை தந்து செல்கிறார் உ.வே.சா.

*இடிக்குங் கேளிர் நுங்குறை யாக*
*நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல*
*ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்*
*கையி லூமன் கண்ணிற் காக்கும்*
*வெண்ணெ யுணங்கல் போலப்*
*பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே (குறுந்.58)*

என்பது வெள்ளிவீதியார் தலைவன் கூற்றில் கழற்றெதிர்மறைத் துறையில் பாடிய பாடல். இதற்கு உ.வே.சா. தரும் பதவுரை வருமாறு:

*இடிக்கும் கேளிர் - இடித்துரைக்கும் நண்பரே, நும் குறையாக- நுமது காரியமாக. நிறுக்கல் ஆற்றின்- என் காம நோயை நிறுத்தலைச் செய்தால். நன்று மன் தில்ல — மிக நன்று; எனது விருப்பம் அது. ஞாயிறு காயும் - சூரியன் வெயில் எறிக்கும். வெ அறை மருங்கில்- வெம்மையையுடைய பாறையினிடத்தே. கைஇல் ஊமன் கண்ணின் காக்கும் - கையில்லாத ஊமையன் தன் கண்ணினாலே பாதுகாக்க முயலுகின்ற. வெண்ணெய் உணங்கல் போல — உருகிய வெண்ணெய்யைப் போல, இந்நோய் - என் பாலுண்டான இக்காம நோய். பரந்தன்று — பரவியது. நோன்று கொளற்கு அரிது — பொறுத்துக் கொண்டு நீக்குதற்கு அரிதாயிருக்கின்றது.*

இங்ஙனம் சொற்களைப் பதம் பிரித்து எளிமையான முறையில் பதங்களுக்குப் பொருள் எழுதிச் செல்லும் பாங்கு உ.வே.சா.விடம் காணப்படுகின்றது.

## 8. & 9. முடிபும் கருத்தும்

முடிபு என்னும் பகுதியில் செய்யுளினின்றே முடிபைப் பெற வைத்தும், கருத்து என்னும் பகுதியில் செய்யுளின் கருத்தை ஒருவரியில் சுருக்கமாகவும் தந்து செல்கின்றார் உ.வே.சா.

*கேளிர், நிறுக்கலாற்றின் நன்றுமன்: இந்நோய்*
*பரந்தன்று; நோன்றுகொளற்கரிது*[12]

என்பது செய்யுளினின்றே முடிபை வரவழைத்து உரைக்கப்பட்டமைக்கு ஒரு சான்று.

*காமநோய் பொறுத்தற்கரிதாயிற்று (ப.125)*

*தலைவரைப் பிரிந்திருத்தலினும் உயிர்நீத்தல் சிறப்புடையது (ப.122)*

*(கருத்து) தலைவர் இனி இரவில் வந்து அளவளாவுவார் (ப.178)*

*'ஊரினர், தலைவி ஒரு தலைவன்பால் நட்புடையாளென்பதை அறிந்து கொண்டனர் (ப.180)*

இவை போன்று ஓரிரு வரிகளில் முடிபும் கருத்தும் சுட்டப்படும் தன்மையை உ.வே.சா.விடம் காணலாம்.

## 10. விசேட உரை

விசேட உரை என்னும் பகுதியில் பதங்களுக்குரிய விளக்கங்கள், இலக்கணச் செய்திகள், வரலாறுகள், பொருள் விளக்கங்கள் ஆகியன இடம்பெற்றுள்ளன. பாடல்களில் இடம்பெறும் உள்ளுறை, இறைச்சி முதலியன 'குறிப்பு' எனக் குறிக்கப்பட்டுள்ளன.

*பறைபடப் பணில மார்ப்ப இறைகொள்பு*
*தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய*
*நாலூர்க் கோசர் நன்மொழி போல*
*வாயா கின்றே தோழி யாய்கழற்*
*சேயிலை வெள்வேல் விடலையொடு*
*தொகுவளை முன்கை மடந்தை நட்பே (பா.15)*

என்பது செவிலித்தாய் கூற்றாக அமைந்த ஔவையார் பாடிய பாடல். தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டு சென்ற நிலையில் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்று அச்செய்தியைப் புலப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இப்பாடலுக்கு அமைந்துள்ள விசேடவுரையில் பறையும் சங்கும் முழங்கத் திருமணம் நடைபெறும் செய்தியைச் சுட்டுவதுடன், அக்காலத் திருமண முறையினையும் விளக்கிச் செல்கின்றார், உ.வே.சா.:

*பறையும் சங்கும் மங்கல நாளில் முழங்குவன:*
*'மத்தளம் கொட்ட வரி சங்க நின்றூத, முத்துடைத்*
*தாமநிரை தாழ்ந்த பந்தற் கீழ், மைத்துனனம்பி*
*மதுசூதன் வந்தென்னைக் கைத்தலம் பற்றக்*

*கனாக்கண்டேன் தோழி நான்' (திவ்.நாச்சியார் 6:6) என்பதிலும் மணத்தில் இவ்விரண்டும் கூறப்படுதல் காண்க; பறை என்பது இங்கே தோற்கருவிகளைக் குறித்து நின்றது; 'பல்லாரறியப் பறையறைந்து நாட்கேட்டுக் கல்யாணஞ் செய்து' (நாலடி. 86) என்புழிப் போல, பொதியில் - பொது இல் - அம்பலம் (முருகு. 226,ந.) பலர் கூடியிருத்தற்கேற்ற கிளைப்பரப்பும் நிழலும் உடைமையின் ஆல மரத்தின் அடியிலே அவை கூடுதல் பண்டை வழக்கம் என்று தெரிகின்றது. 'வெல்போர் இராமனருமறைக் கவித்த, பல்வீழாலம் போல' (அகநா.70:15-6) என்பதனாலும் அதன் உரையாலும் இதனை அறியலாகும். கோசர் : மோகூர்ப் பழையனுடைய நியாய சபையில் இருந்த ஒரு வகை வீரர்; இவர் நான்கு பிரிவினர்கள் என்று தெரிகின்றது (மதுரைக்.508-9); நாலூர் — ஓர் ஊருமாம்; விடலை — பாலைத் திணைக்குரிய தலைவன் பெயர்.*

*கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழ்வது உண்டாதலின், உடன்போக்கின் பின் இருவரும் மணம் புரிந்து கொள்வதனால் மடந்தையினது நட்பானது உலகறிய உண்மையாகும் என்றாள் செவிலி (ப.38)*

என்று அமையும்.

இங்ஙனம் விசேடவுரையில் அக்காலத்துத் திருமணம், பலர் கூடியிருக்கும் ஊர் அம்பலமாகிய பொது இடத்தில்-ஆல மரத்தினடியில்-சங்கும் முரசும் முழங்க நடந்த தன்மையும், அதற்குரிய சான்றாக ஆண்டாள் நாச்சியார் பாடிய நாச்சியார் திருமொழிப் பாடல் சான்றும், கோசர் பற்றிய வரலாற்றுச் செய்தியும், நாலூர், விடலை ஆகிய பதங்களுக் குரிய பொருள் விளக்கமும் அமைந்திருக்கும் பாங்கினைக் காணலாம்.

*வேரல் வேலி வேர்க்கோட் பலவின்*
*சார னாட செவ்வியை யாகுமதி*
*யார.். தறிந்திசி னோரே சாரற்*
*சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே* (குறுந்.18)

என்பது கபிலர் பாடிய குறுந்தொகைப் பாடல்.

இரவில் வந்து மீளும் தலைவனுக்குத் தோழி, 'தலைவியினது காமம் அவளால் தாங்கற்கு அரிய தாதலின், விரைவில் வரைந்து கொள்ள வேண்டும்' என வற்புறுத்துவதாக அமைந்துள்ளது.

*இயல்பாகவே பாதுகாப்புடையதாகியும் வேரில் பழுத்தலின் கீழ்உகும் நிலையிலதாகியும் உள்ள பலாப்பழத்தையே நின் மலையிற் கண்டாயாதலின், நீ சிறுகோட்டிற் பெரும்பழந் தூங்கும் நிலையை உணராயாயினாய், அதனை உணர்க.*[13]

என்று தலைவனுக்குத் தோழி அறிவுறுத்துவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

## குறிப்புப்பொருள் சுட்டுதல்

விசேடவுரைப் பகுதியில் இப்பாடலில் அமைந்துள்ள உள்ளுறை, இறைச்சிப் பொருளைக் 'குறிப்பு' எனச் சுட்டுதல் உ.வே.சா.விடம் காணப்படும் நெறி ஆகும்.

*பாதுகாப்பு இலதாகித் தன்னைத் தாங்குதற்குரிய கொம்பும் சிறியதாகித் தானும் பெரியதாகி இருக்கும் பழம் கனிந்து கொம்பினின்றும் உகும்; அன்றிப் பிறரால் கொள்ளவும் படும்; அது போலத் தன்னை வேற்றுவரைவினின்றும் பாதுகாப்பார் இலளாகி உயிரும் சிறியளாகிய இவளிடத்துக் காமம் பின்னும் கனியின் இவள் உயிர் விடுதலும் நேரும்; அன்றிப் பிறர் வரைந்து கொள்ளவும் முயல்வர் என்று உவமையை விரித்துக் கொள்க. பழம் மிகக் கனிந்து உகுவதன் முன் உரிய காலத்தே உரியார் கொள்வதைப் போல இவள் உயிர் நீப்பதற்குள் உரிய பருவத்தே இவளுக்குரியையாகிய நீ வரைந்து கொள்வாயாக என்பது குறிப்பு*[14]

என்று சுட்டிச் செல்கின்றார் உ.வே.சா.

*கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்*
*தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட (பா.225)*

என்னும் பாடல் வரிகளுக்கு உரை எழுதுமிடத்து,

*கன்று தன் முலை மாந்திக்கொண்டே இருப்பத் தன் பசியை நீக்குதற்கும் அக்கன்றிற்குரிய பாலைப் பெறுவதற்கும் தினையைப் பிடி உண்டது போல,*

*நீயும், யாங்கள் நின்வரவை எதிர்நோக்கி மகிழ்ந்திருக்குங்கால் நின் கடப்பாட்டையும் இவளை வரைவதையும் ஒருங்கே செய்வித்தற்குக் கருவியாகிய பொருளை ஈட்டி வருதற்குரியை என்பது குறிப்பு (ப.422)*

என்று இப்பாடலில் அமைந்துள்ள உள்ளுறைப் பொருளை எடுத்துக் காட்டியுள்ளார் உ.வே.சா.

*நசைபெரி துடையர் நல்கலு நல்குவர்*
*பிடிபசி களைஇய பெருங்கை வேழம்*
*மென்சினை யாஅம் பொளிக்கும்*
*அன்பின தோழியவர் சென்ற ஆறே (குறுந். 37)*

என்பது தலைவனது பிரிவை ஆற்றாத தலைவிக்குத் தோழி 'தலைவர் மிக்க அன்புடையர்; அவர் சென்ற பாலை நிலத்தில் களிறு தன் பிடியை அன்போடு பாதுகாத்து நிற்கும் காட்சியைக் கண்டு நின்னைப் பாதுகாக்கும் தம் கடமையை யெண்ணி விரைவில் மீள்வர்' என்று ஆறுதல் கூறும் வகையில் பாடப்பட்ட பாடல் இது.

*இயல்பாகவே நின்பால் விருப்பமும் தலையளி செய்தலும் உடையராதலாலும், தாம் செல்லும் வழியில் நிகழும் நிகழ்ச்சி ஆண் பாலர் தமக்குரிய மனைவியரிடத்தில் அன்புவைத்துப் பாதுகாக்கும் கடமையை நினைப்பூட்டும் இயல்புடைய தாயினமையாலும் அவர் விரைந்து வந்துவிடுவரென்பது குறிப்பு.*[15]

*கான மஞ்ஞை யறையீன் முட்டை*
*வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும்*
*குன்ற நாடன் கேண்மை . . . (குறுந். 38)*

*மயில் அடைகாத்தற்குரிய அதன் முட்டை அங்ஙனம் செய்யப்படாது பாறையின் மேல் தனித்துக் கிடப்பதையன்றி அதனைக் குரங்கின் குட்டி விளையாட்டாக உருட்டுவது போல, தலைவன் உடனிருந்து இன்புறுதற்குரிய தலைவி அவன் பிரிவினால் துன்புறுதலையன்றி, தமக்கு நகை விளைவதொன்றே பயனாக ஊரார் அலர் கூறும் துன்பத்தையும் பெற்றாளென்பது குறிப்பு.*[16]

## பழக்கவழக்கங்களைச் சுட்டுதல்

### சிலம்புகழி நோன்பு

'விசேடவுரை' பகுதியில் அக்கால மக்களின் பழக்க வழக்கங்களையும் சுட்டிச் செல்கின்றார் உ.வே.சா. அவற்றுள் ஒன்று 'சிலம்புகழி நோன்பு' என்னும் வழக்கம் ஆகும்.

*வில்லோன் காலன கழலே தொடியோள்*
*மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்*
*யார்கொல் அளியர் தாமே* (குறுந். 7)

என்பது பெரும்பதுமனார் பாடிய குறுந்தொகைப் பாடல் ஆகும். இப்பாடலில் அமைந்துள்ள 'தொடியோள் மெல்லடி மேலவுஞ் சிலம்பே' என்னும் அடியை விளக்குமிடத்து, 'சிலம்புகழி நோன்பு' எனப்படும் சடங்கினைக் குறிக்கின்றார் உ.வே.சா:

*தலைவனால் தலைவி வரைந்து கொள்ளப் படாமையைப் புலப்படுத்துவார், 'மெல்லடி மேலவும் சிலம்பே' என்றார்; மணம் புரிவதற்கு முன், மணமகளது காலில் பெற்றோர்களால் அணியப்பட்ட சிலம்பை நீக்குதற்கு ஒரு சடங்கு செய்யப்படும்; அது 'சிலம்பு கழி நோன்பு' எனப்படும்; 'நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும், எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச் சொல்லி னெவனோ... பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே' (ஐங்.311) என்பதனால் அந்நோன்பு மணத்திற்கு முன்பு செய்யப்படும் என்று தெரிகின்றது . . . (பக். 20)*

### மடல் ஏறுதல்

*மாவென மடலும் ஊர்ப பூவெனக்*
*குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப*
*மறுகின் ஆர்க்கவும் படுப*
*பிறிதும் ஆகுப காமம்காழ்க் கொளினே (பா.17)*

என்பது பேரெயின் முறுவலார் என்னும் புலவர் பாடிய குறுந்தொகைப் பாடல். இப்பாடலின் விசேடவுரையில், காமம் மிக்க தலைவன் தலைவியைப் பெறும்பொருட்டு மடலூர்ந்து வரும் வழக்கத்தை எடுத்துரைக்கின்றார் உ.வே.சா.:

*காமம் மிக்க தலைவன் பனைமடலால் குதிரையைப் போல் ஓர் உருவம் அமைத்து அதன் கழுத்தில்*

*மணி, மாலை முதலியவற்றைப் பூட்டித் தன் உருவத்தையும் தலைவியின் உருவத்தையும் ஒரு படத்தில் எழுதிக் கையில் ஏந்தி அதன்மேல் யாவரும் அறிய ஊர்ந்து வருதலை மடல் ஏறுதல் என்பர்; அங்ஙனம் அவன் வருவதைக் கண்ட ஊரினர் பட முதலியவற்றால், 'இன்னவளுக்கும் இவனுக்கும் நட்பு உண்டு' என்பதை அறிந்து அதனை வெளிப்படக் கூறிப் பழிப்பர்; அது கேட்டுத் தமர் மணம் புரிவிப்பர் (கலி.141). மடல் ஏறும் தலைவன் நீறு, எருக்கமாலை, ஆவிரம் பூமாலை முதலியவற்றை அணிந்து வருதல் வழக்கம் என்று தெரிகின்றது.*

## குறி பார்க்கும் வழக்கம்

தலைவியின் நோய்க்குக் காரணத்தை அறிய முற்படும் தாயர், அகவன் மகளை அழைத்துக் குறிகேட்பது அக்கால வழக்கம். அகவன் மகள் கட்டுவிச்சி என்றும் கூறப்படுவாள்.

*அகவன் மகளே அகவன் மகளே*
*மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்*
*அகவன் மகளே பாடுக பாட்டே*
*இன்னும் பாடுக பாட்டேஅவர்*
*நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே. (குறுந். 23)*

என்பது கட்டுக்காணிய நின்றவிடத்துத் தோழி அறத்தொடு நின்றது என்னும் துறையில் அமைந்த ஔவையார் பாடல். இப்பாடலின் விசேடவுரையில், அக்காலக் குறி பார்க்கும் வழக்கத்தை விரிவாக எடுத்துரைக்கின்றார் உ.வே.சா.

தலைவியினுடைய காமநோயை அறிய மாட்டாத தாயர் அவள் வேறுபாட்டின் காரணத்தை ஆராயும்பொருட்டு அகவன் மகளாகிய கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப் பார்ப்பது வழக்கம். கட்டுவிச்சி முறத்தில் நெல்லையிட்டு அதனை எண்ணி அதனாற் போந்த சில நிமித்தங்களை அறிந்து, 'இவள் முருகனால் அணங்கப்பட்டாள்' என்று கூறுவாள். அது கேட்ட தாயர் வேலனை அழைத்து வெறியாட்டெடுப்பர்.

இவ்வகவன் மகள் தெய்வமேறிக் குறி கூறுதலும் உண்டு. இவளைப் பிற்காலத்தார் குறத்தி என்று கூறுவர். 'கட்டினுங் கழங்கினும் வெறியென

விருவரும் ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்' (தொல்.களவு.24) என்பதன் உரையில், 'கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினானும் கழங்கினானும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம்மையல் தீராது என்று கூறுதலின் அவ்விருவரும் தம்மின் ஒத்த திறம் பற்றியதனையே செய்யும் செய்தியிடத்தும்' (ந.) என்றுள்ள பகுதி தாயர் கட்டுப் பார்ப்பதற்குரிய விதியைப் புலப்படுத்துகின்றது (ப.55).

*குன்ற நாடன் பிரிவிற் சென்று*
*நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை*
*செம்முது பெண்டிரொடு நென்முன் னிறீஇக்*
*கட்டிற் கேட்குமாயின் (நற்.288:4-7)*

*பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅன்*
*துனியில் கொள்கையொடு அலர்நமக் குவந்த*
*இனிய உள்ளம் இன்னா வாக*
*முனிதக நிறுத்த நல்கல் எவ்வஞ்*
*சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்*
*அறிந்தனள் அல்லள் அன்னை வார்கோற்*
*செறிந்திலங்கு எல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்*
*கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்*
*பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ*
*முருகன் ஆரணங்கு என்றலின் அதுசெத்து*
*(அகநா.98: 1-10)*

என்பன இவ்வழக்கத்தை விளக்கும். இதனை அன்றி,

*அகலுள் ஆங்கண் அறியுநர் வினாய் - அகன்ற இடத்தை உடைய ஊரிடத்துக் கட்டினாலும் கழங்கினாலும் எண்ணியறிவாரை வினாவி அலர் தெய்வத்தான் வந்த வருத்தமென்றலின் (குறிஞ்சிப். 7, ந.),*

*சேரியாயத்துச் செம்முதிர் பெண்டிரொடு, கட்டறி மகடூஉக் கடிமுறத் திட்ட, வட்ட நெல்லு மாண்பில பெரிதென (பெருங்.1.37:235-7)*

*கட்டுவிச்சி கட்டேறிச், சீரார் சுளகிற் சிலநெல் பிடித்தெறியா, வேரா விதிர்விதிரா மெய்சிலாக் கைமோவாப் போராயிரமுடையானென்றாள்"*
*(திவ்.சிறிய திருமடல், 20-21)*

*இது காண்மின் அன்னைமீர் இக்கட்டுவிச்சி*
*சொற்கொண்டு நீர், எதுவானுஞ் செய்தங்கோர்*
*கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்*
*(திவ். திருவாய். 4. 6:3)*

*என்பவற்றாலும், திருக்கோவையாரிலுள்ள கட்டு வைப்பித்தல், கலக்கமுற்று நிற்றல், கட்டுவித்தி கூறல் (238-5)*

என்னும் துறைகளுக்குரிய செய்யுட்களாலும், அவற்றின் உரையாலும்,

*முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா*
*முறத்திலொரு படிநெல்லை முன்னேவை அம்மே*
*இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை*
*இரட்டைபட எண்ணினபோது ஒற்றைப்பட்ட தம்மே*
*உன்னாமுன் வேள்விமலைப் பிள்ளையார்*
*வந்துதித்தார்*
*உனக்கினி யெண்ணினகருமம் இமைப்பினிற்கை*
*கூடும்*
*என்னாணை யெங்கள்குலக் கன்னிமாரறிய*
*என்குறி தப்பினுந்தப்பாது இக்குறிகாண் அம்மே*
*(மீனாட்சியம்மை குறம், 26)*

என்பதனாலும், இக்கட்டுவிச்சியைப் பற்றிய செய்திகள் சிலவற்றை உணரலாகும்; பிற்காலத்துக் கலம்பகத்துள்ள குறமென்னும் உறுப்பாலும் குறவஞ்சி என்னும் பிரபந்தம் முதலியவற்றாலும் சில செய்திகள் புலப்படும்.

மும்முறை அகவன் மகளை விளித்தது தான் கூறும் கூற்றின் உண்மையைக் கூர்ந்து அறியும் பொருட்டு; மனவுக்கோப்பன்ன என்றது அவள் அணிந்த அணியையே அவள் கூந்தலுக்கு உவமை கூறியவாறு. இவ்வுவமையால் கட்டுவிச்சி நரைமூதாட்டி என்பது பெறப்படும். மலைவாழ் சாதியினளாகிய அகவன்மகள் தான்கண்ட மலைகளின் வளத்தைப் பாடுவது இயல்பாதலின், அவள் பல மலைவளங்களைப் பாடினாள்; அவற்றுள் தலைவனது மலை வளத்தைக் கேட்பதில் தலைவிக்குப் பெருவிருப்பம் உளதாமாதலின் தோழி அதனை மீண்டும் பாடென்றாள். 'இன்னும் பாடுக' என்றதனைப் பின்னுங் கூட்டுக.

> *'அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டு' என்று கூறின், 'அவர் யார்?' என்னும் ஆராய்ச்சி தாயரிடையே பிறந்து உண்மை அறிதற்கு ஏதுவாமாதலின் இஃது அறத்தொடு நிற்றலாயிற்று (பக்.30-56).*

தொல்காப்பியம் தொடங்கி, குறவஞ்சி தோன்றிய காலம் வரை உள்ள குறி கூறும் வழக்கத்தை, வளர்ச்சியை இவ்வுரையில் புலப்படுத்தி விடுகிறார் உ.வே.சா.

## 11. மேற்கோள் ஆட்சி

இலக்கண இலக்கியங்களின் உரைகளில் உரையாசிரியர்கள் பல குறுந்தொகைச் செய்யுட்களையும், செய்யுட் பகுதிகளையும் சான்று காட்டியுள்ளனர். இவற்றை, உரையாசிரியர்களின் கால முறையில் வரிசைப்படுத்தியும், சில இடங்களில் உரையாசிரியர்களுடைய கருத்துக்களை அடிக்குறிப்பிலும் விளக்கிச் செல்கின்றார், உ.வே.சா.

> *ஏனைய தொகை நூல்களைக் காட்டிலும் குறுந்தொகையே மிகுதியாக எடுத்தாளப்படுகின்றது. இதனால் இத்தொகைநூல் செய்யுட்களில் உரை யாசிரியர்கள் கருத்துக்கள் பெரிதும் ஈடுபட்டிருந்தன என்று தெரிகின்றது. இந்நூலுள் இப்பொழுது தெரிந்த வரையில் 165 செய்யுட்களே பிற நூல் உரைகளில் மேற்கோளாகக் காட்டப் பெறாதவை (முகவுரை. LXiii)*

என்று இந்நூலின் முகவுரையில் புள்ளி விவரத்துடன் குறிப்பிடுகின்றார் அவர்.

குறுந்தொகை நூலை மேற்கோளாக எடுத்தாண்ட உரை-யாசிரியர்கள் என்று 28 பேரைக் குறிப்பிட்டுள்ளார் உ.வே.சா. அவர்கள் வருமாறு: 1.அகப்பொருள் விளக்க உரையாசிரியர் 2. அடியார்க்கு நல்லார் 3.அழகிய மணவாள ஜீயர் 4.இளம்பூரணர் 5.இறையனாரகப் பொருளுரை ஆசிரியர் 6.கல்லாடர் 7.களவியற் காரிகை உரையாசிரியர் 8. காரிரத்ன கவிராயர் 9. சங்கர நமச்சிவாயர் 10.சாமிநாத தேசிகர் 11.சிவஞான முனிவர் 12.சேனாவரையர் 13.சொக்கப்ப நாவலர் 14. தக்கயாகப் பரணி உரையாசிரியர் 15.தண்டியலங்கார உரையாசிரியர் 16.தமிழ்நெறி விளக்க உரையாசிரியர் 17.திருமயிலை யமகவந்தாதி உரையாசிரியர் 18. திவ்யப் பிரபந்த ஈட்டு வியாக்யானக் காரராகிய நம்பிள்ளை 19.தெய்வச்சிலையார் 20. நச்சினார்க்கினியர் 21.பரிமேலழகர் 22.புறநானூற்று உரையாசிரியர் 23.பெருந்தேவனார் 24. பேராசிரியர் 25. மயிலேறும் பெருமாள் பிள்ளை 26. மயிலைநாதர்

27. யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் 28. வைத்தியநாத தேசிகர் ஆகியோர்.

*நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரல்*
*கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே' (குறுந்.3)*

என்பது தேவகுலத்தார் என்னும் புலவர் பாடிய தலைவி கூற்றுப் பாடல். வரையாது ஒழுகும் தலைவன் வேலிப்புறத்தே நின்றதை அறிந்த தோழி, அவன் வரைந்து கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் உடையவளாகி அவன் செவியில் படும்படி, அவனது நட்பைப் பழித்துக் கூறியபோது, தலைவி, தான் தலைவனோடு கொண்டுள்ள நட்பு மிகச் சிறப்புடையது என்று உணர்த்துவதாக அமைந்துள்ளது இப்பாடல். இப்பாடலைப் பல இலக்கண உரையாசிரியர்கள் தம் உரையில் எடுத்துக்காட்டியுள்ளனர்:

*3.முதற்பொருள் முதலிய மூன்றுங் கொண்டே இவ்வைந்திணை ஆமென மேற்கூறுபவாகலின் இவற்றிற்கு இப்பெயரும் முறையும் முறையானே கருப்பொருள் பற்றியும் உரிப்பொருள் பற்றியும் ஆயின போலும் என்பது; அற்றேல் கருப்பொருள் பலவன்றே? அவற்றுள் குறிஞ்சி முதலாயினவற்றால் பெயர் பெற்றவாறு என்னையெனின், கருங்கோற் குறிஞ்சியெனவும்... சான்றோரான் எடுத்துக் கூறப்படுதலின் அவற்றுள் அவை சிறத்தலானென்க' (இ.வி.379)*

என்று இலக்கண விளக்கம் கூறுவதையும்,

3-4 'முல்லை குறிஞ்சி யென்பன இடுகுறியோ காரணக் குறியோவெனின் ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறியென்று கொள்ளப்படும்; என்னை காரணமெனின் ... கருங்கோற்... நட்பே: என்றவழி மைவரையுலகிற்குக் குறிஞ்சிப் பூ சிறந்ததாகலானும்...இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப்படும்' (தொல்.அகத்.5. இளம்.)

என்று இளம்பூரணர் சுட்டுவதையும்,

2-4. 'சாரற்... நட்பே; இதில் நாட்டிற்கு அடையாகி வந்த குறிஞ்சிப் பூவும் தேனும் இறைச்சிப் பொருள்

என்று கொள்க' (தொல்.பொருளியல் 33, இ.வி.588)'
(ப.12)

என்று இலக்கணவிளக்கம் சுட்டுவதையும் எடுத்துக்காட்டியுள்ளார் உ.வே.சா.

இங்ஙனம் இப்பாடல், கருப்பொருள் கொண்டு முதற்பொருள் வகுத்தமைக்கும், குறிஞ்சி நிலத்திற்குக் குறிஞ்சிப்பூ சிறந்ததாகலின் குறிஞ்சி என வழங்கப்பட்டமைக்கும், குறிஞ்சிப்பூவும் தேனும் இறைச்சிப் பொருள் தருவன என இறைச்சிப் பொருட்கும் சான்றாகக் காட்டப்பட்டமையைத் தம் உரையில் எடுத்துக்காட்டியுள்ளார் உ.வே.சா.

## இலக்கணக் குறிப்புத் தருதல்

தலைமகள் தன்னுடன் வருவதற்கு உடன்பட்டமையை உணர்ந்த தலைவன், பாலை நிலத்தின் இன்னாமையையும், அதில் நடக்க இயலாத தலைவியினது மென்மையையும் கருதி, உடன்போக்கிற்கு உடன்படா நிற்க, 'நும்மொடு வரின் தலைவிக்குப் பாலை நிலமும் இனியதாகும்' என்று கூறித் தலைவனை உடன்படச் செய்கிறாள் தோழி.

*யானை கைமடித் துயவும்*
*கானமும் இனியவாம் நும்மொடு வரினே (பா.388)*

என்பது தோழி தலைவனிடம் கூறும் கூற்று. இப்பாடல் அடிக்கு

*கானமும்: உம்மை இழிவு சிறப்பு. நும்மொடு வரின் கானமும் இனியவாமென்றதனால் நும்மொடு வாராளாயின் வீடும் இன்னாத தாகுமென்பதும் பெறப்படும் (குறுந்.124:4). இதனால், 'தலைவியின் மென்மை குறித்து அஞ்சாது உடன்கொண்டு செல்க' என்று அறிவுறுத்தினாளாயிற்று. இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி' (ப.685)*

என்று விளக்கம் அளிக்கின்றார் உ.வே.சா. இதில் இலக்கணக் குறிப்பு, அணிநயம் சுட்டப்படுதல், கானமும் எனவரும் உம்மையால் பெறப்படும் எதிர்மறைக் கருத்து' ஆகியவற்றை விளக்கிச் செல்லும் நுட்பம் புலப்படும். இதே போன்ற கருத்து.

*உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்தலை*
*ஊர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்காடு*
*இன்னா என்றி ராயின்*
*இனியவோ பெரும தமியோர்க்கு மனையே*

என்னும் குறுந்தொகை 124-ஆம் பாடலில் வெளிப்படுவதையும் நுணுகி நோக்கிக் குறித்துள்ளார் உ.வே.சா.

## 12. ஒப்புமைப் பகுதி

குறுந்தொகைப் பாடற் கருத்துக்களுடன் பொருந்தி வரக்கூடிய பிற நூற் கருத்துக்களையும், பாடல் வரிகளையும் 'ஒப்புமைப்பகுதி' என்னும் தலைப்பில் காட்டியுள்ளார் உ.வே.சா. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, முத்தொள்ளாயிரம், சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சீவக சிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம், தேவாரம் முதலான திருமுறைகள், திவ்யப்பிரபந்தப் பாடல்கள், தொல்காப்பியம், நன்னூல், புறப்பொருள் வெண்பாமாலை, வீரசோழியம், யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கல விருத்தி, இலக்கண விளக்கம் முதலான இலக்கண நூல்கள், தமிழ்விடு தூது, திருவாரூர் மும்மணிக் கோவை, திருச்சிற்றம்பலக் கோவை, திருவெங்கைக் கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை, திருஏகம்பமாலை, தணிகைப் புராணம், திருவேகம்பமுடையார் திருவந்தாதி முதலான சிற்றிலக்கியங்கள், குணநாற்பது, தமிழ்நெறி, அறநெறிச் சாரம் முதலான அரிய நூல்கள் பலவற்றினின்றும் உ.வே.சா. ஒப்புமையுடைய பகுதிகளை மேற்கோள் காட்டி விளக்கிச் செல்கின்றார்.

இவ்வொப்புமைப் பகுதியை நோக்குமிடத்து, உ.வே.சா.வின் பரந்துபட்ட இலக்கியப் புலமை வெளிப்படுகின்றது.

தலைவி தலைவன் மீது கொண்ட நட்பிற்கு நிலம், வான், நீர் ஆகிய மூன்றினை எடுத்துக் காட்டி, அவற்றிலும் பெரியது, உயர்ந்தது, ஆழமானது எனக் கூறுகிறாள் (பா.3).

நிலம், வான், கடல் என்ற மூன்றும் பெருமைக்கு எல்லையாகக் கூறப்படுதலைக் குறட்பாக்களை மேற்கோள் காட்டி விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா.

*காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்*
*ஞாலத்தின் மாணப் பெரிது (குறள் 102)*

*பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்*
*நன்மை கடலிற் பெரிது (குறள் 103)*

*வானுயர் தோற்றம் எவன்செய்யுந் தன்நெஞ்சம்*
*தானறி குற்றப் படின் (குறள் 272)*

மேலும்,

*மண்ணினும் வானினும் மற்றை மூன்றினும்*
*எண்ணினும் பெரியதோர் இடர் (கம்ப.அயோமுகி. 99)*

என்னும் கம்பராமாயணப் பாடலையும் ஒப்புமை காட்டியுள்ளார்.

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியப் புக்க தலைவனை நோக்கி, 'தலைவி நின் தண்ணளியால் வாழும் நிலையினள்; ஆதலின் விரைவில் மீண்டு வருவாயாக' என்பது பட, (தோழி தலைவனிடம் கூறுகிறாள்)

*... ... ... சேர்ப்ப*
*தாயுடன் றலைக்கும் காலையும் வாய்விட்டு*
*அன்னா என்னும் குழவிபோல*
*இன்னா செயினும் இனிதுதலை யளிப்பினும்*
*நின்வரைப் பினளென் தோழி*
*தன்னுறு விழுமம் களைஞரோ இலளே (குறுந்.397)*

என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

*அன்னை அலைப்பினும், அணைப்பார் பிறரின்றி அவள் மாட்டே செல்லும் குழவி போல, நீ அருளின்றிப் பிரியினும் நின் மாட்டே செல்லும் காதலுடையாள் தலைவி என்று உவமையை விரித்துக் கொள்க (ப.699)*

என விளக்கம் அளிக்கின்றார் உ.வே.சா. இக்கருத்திற்கு,

*தருதுயரந் தடாயேலுன் சரணல்லாற் சரணில்லை*
*விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே*
*அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்*
*அருள்நினைந்தே அழும்குழவி அதுவேபோன்றிருந்தேனே*
*(பெருமாள் திருமொழி. 5:1)*

என்னும் குலசேகராழ்வாரின் பாடலையும்,

*குழவி அலைப்பினும் அன்னேயென் றோடும் (நான்மணி, 25)*

என்னும் நான்மணிமாலைப் பாடல் வரியையும் எடுத்துக்காட்டுவது மிக மிகப் பொருந்துவதாகும்.

*நீர்வார் கண்ணை நீஇவண் ஒழிய*
*யானே பிரிகிற் பவரே (குறுந்.22)*

என்னும் பாடலில் வரும் 'நீர்வார் கண்ணை' என்னும் தொடருக்கு, 'நீர்வார் கண்ணை யெம்முன் வந்தோய்' (சிலப்.20:48), என்னும் சிலப்பதிகார வரியையும், 'நீர்வார் கண்ணேன் கலுழும்' (நற்.143:4) என்னும் நற்றிணைப் பாடல் வரியையும் ஒப்புமை காட்டிச் செல்கின்றார் உ.வே.சா.

'மள்ளர் குழீஇய விழவி னானும்' எனத் தொடங்கும் ஆதிமந்தியார் பாடிய பாடலின் விளக்கவுரையில்,

நாயகியானவள் நாயகனான ஸர்வேச்வரனைப் புறம்பே திரளிடையாகிலும் காண ஆசைப்பட்டுப் புலம்பின பாசுரம்... இந்தக் கிளவி, மள்ளர்...

> கோனையென்று அகத்தமிழிலும் சொல்லப்பட்டது' (திவ்.திருவிருத்தம், 84, அழகிய மணவாள ஜீயர் ஸ்வாபதேசம்) (ப.73)

என்று அழகிய மணவாள ஜீயர் நம்மாழ்வாரின் திருவிருத்த உரைக் குறிப்பில் சுட்டிய நாயக-நாயகி பாவத்தை எடுத்துக்காட்டியுள்ளார் உ.வே.சா.

இங்ஙனம் உ.வே.சா.வின் உரைநெறி கூற்று, கூற்று விளக்கம், மூலம், பிரதிபேதம், பழைய கருத்து, ஆசிரியர் பெயர்கள், பதவுரை, முடிபு, கருத்து விசேடவுரை, மேற்கோள் ஆட்சி, ஒப்புமைப்பகுதி என்னும் பன்னிரண்டன் அடிப்படையில் அமைந்து, படிப்பவர்க்கு இன்பம் பயப்பதாய் அமைந்துள்ளது.

## குறிப்புகள்

1. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், முகவுரை, ப.xi.
2. மேலது, முகவுரை, ப.xiv.
3. தமிழ்க் காதல், ப.20.
4. தமிழ்ச்சுடர் மணிகள், ப.299.
5. பெ.நா. அப்புஸ்வாமி, உண்மைப் பதிப்பாசிரியர், டாக்டர் உ.வே.சாமிநாதய்யர், பக்.89-90.
6. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், முகவுரை, ப.xviii.
7. பாங்காயினார்—பக்கத்தில் உள்ள தோழி முதலியோர், பக்.21-22.
8. மேலது, ப.179.
9. மேலது, பக்.98-99.
10. மேலது, பா.9.
11. மேலது, ப.cix
12. மேலது, ப.125.
13. மேலது, ப.45.
14. மேலது, ப.45.
15. மேலது, ப.86.
16. மேலது, ப.88.
17. மேலது, ப.20.

# 3. உரைத் திறன்

உ.வே.சா.வின் உரைத் திறனை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை: 1. உரை மரபுகள் 2. உரை நயங்கள்.

சொற்பொருள் விளக்கம் தருதல், நாகரிகம், பண்பாடு புலப்படுத்துதல், பழக்க வழக்கங்களை எடுத்துக் கூறுதல், வரலாற்றுச் செய்திகளை எடுத்துரைத்தல், பல்துறைப் புலமை விளங்க எழுதுதல் முதலான உரைமரபுகளும், சொல்நயம், பொருள்நயம், தொடர் நயம், நிரல் நயம், இலக்கண நயம், அடைமொழி நயம் முதலான உரை நயங்களும் உ.வே.சா.வின் உரையில் வெளிப்படுகின்றன.

## உரை மரபுகள்

### சொற்பொருள் விளக்கம் தருதல்

1. உ.வே.சா. தம் குறுந்தொகைப் பதிப்பின் பின்னிணைப்பில் 91 பக்க அளவில் 'அரும்பத முதலியவற்றின் அகராதி'யைத் தொகுத்துத் தந்துள்ளார்; சொற்களுக்கு வெறும் அகராதிப் பொருளை மட்டுமன்றி, நயப் பொருள், நுண்பொருள், மரபுப்பொருள் ஆகியவற்றையும் சுட்டிச் செல்கின்றார். சில சான்றுகள் வருமாறு:

*அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து*
*பொருள்வயிற் பிரிவோர் உரவோ ராயின்*
*உரவோர் உரவோ ராக*
*மடவ மாக மடந்தை நாமே* (குறுந்.20)

என்பது தலைவி கூற்றாக அமைந்துள்ள பாடல். இப்பாடலில் வரும் அருள், அன்பு என்னும் இரு சொற்களுக்குப் பொருள் வேறுபாடு விளங்க நுண்ணிய விளக்கம் அளித்துள்ளார் உ.வே.சா:

> அருள்-தம்மோடு ஒரு தொடர்பும் இல்லாதார் மாட்டும் அவர் துயரம் கண்டால் உண்டாகும் இரக்கம்;
>
> அன்பு—தொடர்பு உடையாரிடத்தும், தன்னாற் புரக்கப்படுவார் மேலும் உளதாகிய காதல்.
>
> அன்பினின்றும் அருள் உண்டாதல் தோற்றும் முறை; அருளின்பின் அன்பு நீங்குதல் நீங்கும் முறை. பெண்ணென்னும் பொதுமை பற்றி என்பால் அருளேனும், துணைவி என்னும் சிறப்புப் பற்றி

> அன்பேனும் உளராயின் நீங்கார் என்பது குறிப்பு. துணைவியைத் துறந்து போவார் அருளும் அன்பும் உடையராதல் இல்லை என்பது பெறப்பட்டது

என்று பொருள் வேறுபாட்டை விளக்கி இப்பாடலுக்கு உரை வரைந்துள்ளார் உ.வே.சா.

> *உள்ளினென் அல்லெனோ யானே, உள்ளி*
> *நினைத்தனென் அல்லெனோ பெரிதே (குறுந்.99)*

என்பது தலைவன் கூற்றாக வரும் பாடல்.

> உள்ளுதல் : உள்ளத்துள் எண்ணுதல்; நினைத்தல்: மீட்டும் மீட்டும் எண்ணுதல் (ப.200)

என்று உள்ளுதல், நினைத்தல் ஆகிய இரு சொற்களுக்கும் இடையே விளங்கும் பொருள் வேறுபாட்டை நயமுற எடுத்துக்காட்டியுள்ளார் உ.வே.சா.

2. 'அம்பல் ஊரும் அவனொடு மொழிமே' (குறுந். பா.51) என்னும் பாடல் அடியில், வரும் அம்பல் என்பதற்கு–சிலரறிந்து கூறும் பழிமொழி எனப் பொருள் கூறியவர்,

> சொல் நிகழாதே முகிழ் முகிழ்த்துச் சொல்லுவது (இறை.22, உரை)

என்றும்,

> 'பரவாத களவு' (திருச்சிற்.180-பேர்) என்றும் கூறப்படும். அம்பலூர் அவனொடு மொழிதலாவது, ஆங்காங்கே சிலர் சிலர் கூடி நின்று பழி கூறுவாராகி, இன்னாள் இன்னானோடு நட்புடையாள் போலும்' என்று உரைத்தல்

(ப.112) என்றும் பொருள் விளக்கத்துடன் பிற நூல்களினின்றும் மேற்கோள் காட்டியும் விளக்கிச் செல்லும் முறையை உ.வே.சா.விடம் காணலாம்.

3. 'ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லென' (குறுந். 63) என்னும் பாடல் வரியில் வரும் 'இல்லோர்' - என்ற சொல்லுக்குப் 'பொருளில்லாதவர்' என்று பொருள் கூறியவர், பொருளின்மையையே 'இன்மை' என்றும், 'பொருளில்லோரையே 'இல்லோர்' என்றும் வழங்குதல் மரபு (ப.133) என மரபில் வழங்கும் பொருளை எடுத்துக்காட்டி உ.வே.சா. விளக்கம் தந்துள்ளார்.

'குன்றக் கூகை குழறினும்' (குறுந்.153) என்னும் பாடல் வரியில் வரும் 'குழறுதல்' என்னும் சொல்லுக்குப் 'பொருளற்ற ஒலியைச் செய்தல்; கூகை ஒலித்தலைக் குழறலென்றல் மரபு' (ப.295) என்று மரபு சான்ற பொருள் கூறி விளக்கம் அளித்துள்ளார் உ.வே.சா.

4. 'செய்வினை முடித்த செம்மல் உள்ளமோடு' (குறுந்.270) தலைவியைக் காண வருகின்றான் தலைவன்.

> செம்மல் என்பதற்கு உள்ள நிறைவு; செம்மலுள்ளம் என்பதற்குத் தலைமை பொருந்திய உள்ளம் என்று பொருள் எழுதுவர் (முருகு.62,ந.)

என்று நச்சினார்க்கினியரின் உரையையும் மேற்கோள் காட்டி விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா.

> *வில்லோன் காலன கழலே, தொடியோள்*
> *மெல்லடி மேலவும் சிலம்பே, நல்லோர்*
> *யார்கொல்? அளியர் தாமே!* (குறுந்.7)

என்பது உடன்போக்கு மேற்கொண்டு செல்லும் தலைவனையும் தலைவியையும் வழியில் கண்டோர் கூறும் கூற்று இது.

> உடன்போக்கின்கண் நேரும் இடையூறுகளை நீக்கற் பொருட்டு வில்லுடையனாதலின் தலைவனை வில்லோன் என்றார்... தூய்மை, அன்பு, உவகை முதலிய அகத்தியல்பை முகத்தால் அறிந்தமையின், 'நல்லோர்' என்றார்'' (பக்.19-20)

என்று 'வில்லோன்', 'நல்லோர்' என்னும் சொற்களுக்குப் பாடற் கருத்திற்கு ஏற்ற பொருள் விளக்கம் செய்துள்ளார் உ.வே.சா.

> *முட்டு வேன்கொல் தாக்கு வேன்கொல்*
> *ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்டு*
> *ஆஅ ஒல்லெனக் கூவு வேன்கொல்* (குறுந். 28)

என்னும் பாடலில் வரும் முட்டுவேன், தாக்குவேன், கூவுவேன் என்னும் சொற்களுக்கு நுட்பமான வேறுபாடு காட்டி விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா.

> முட்டுதல் உடம்பாற்றீண்டுதல் என்றும், தாக்குதல் கோல் முதலிய கருவிகளால் தீண்டுதல் என்றும் கொள்க;முட்டுதல்-எதிர்த்தலுமாம் (தொல்.களவு.21).... முட்டுவேன் கொல்-சுவர் முதலியவற்றில் முட்டிக் கொள்வேனோ? தாக்குவேன் கொல்-தாக்கிக் கொள்வேனோ என்று பொருள் கூறலும் ஆம்.

> ஓர் பெற்றி மேலிட்டுக் கூவுதலாவது, 'பாம்பு, பாம்பு' என்றேனும், 'திருடன் திருடன்' என்றேனும் பிறவாறேனும் கூவுதல்' (ப.67).

> இங்ஙனம் கூவுவதால் ஊரார் எழுந்து அலர் தூற்றுவர்; அவ்வலர் தலைவன் தன்னை வரைந்து கொள்வதை விரைவில் கூட்டும் உபாயமாதலின் தலைவிக்கு இன்பம் பயக்கும்.

## வரலாற்றுச் செய்திகள்

குறுந்தொகை உரையில் பல வரலாற்றுச் செய்திகளையும் வரலாற்றுக் குறிப்புகளையும் தந்து செல்கின்றார் உ.வே.சா.

*கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி*
*காமம் செப்பாது கண்டது மொழிமோ*
*பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்*
*செறியெயிற் றரிவை கூந்தலின்*
*நறியவும் உளவோநீ யறியும் பூவே* (குறுந்.2)

என்பது இறையனார் பாடிய பாடல். இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியின் கூந்தல் இயற்கை மணம் உடையது என்பதைத் தலைவன் வண்டை வினாவுதல் வாயிலாகப் புலப்படுத்தி நயம் பாராட்டும் வகையில் அமைந்துள்ளது.

> இச் செய்யுளை, 'ஆலவாய் இறையனார் தருமி என்னும் பிரமசாரிக்குப் பொற்கிழி வாங்கிக் கொடுத்த சிந்தாசமுத்தி யகவல்' என்று தமிழ் நாவலர் சரிதை கூறும். இது, பாண்டியனால் சங்க மண்டபத்தின் முன் கட்டப்பட்ட பொற்கிழியைத் தருமி என்னும் பிரமசாரி ஒருவன் பெறும் பொருட்டு ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் இயற்றி அவனுக்கு அளித்ததென்று கூறப்படும் (ப.9)

என்று இப்பாடல் எழுந்த வரலாற்றினைச் சுட்டுவதுடன், இப்புராணச் செய்தி இடம்பெற்றுள்ள திருவாலவாய்ப் புராணம், கடம்பவனபுராணம், திருவிளையாடல் புராணம், சீகாளத்திப் புராணம், தமிழ் விடுதூது, திருமயிலை யமக அந்தாதி முதலான இலக்கியச் சான்றுகளையும் மேற்கோள் காட்டி விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா.

## நன்னன்

*மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை*
*புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்*

*கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை*
*பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்*
*பெண்கொலை புரிந்த நன்னன் போல*
*வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை*
*ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்*
*பகைமுக வூரிற் றுஞ்சலோ இலளே* (குறுந்.292)

என்பது பரணர் பாடிய பாடல். இரவுக்குறிக்கண் சிறைப் புறமாக நிற்கும் தலைவனுக்குத் தோழி, காப்பு மிகுதியைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது இப்பாடல். இப்பாடலில், நன்னன் என்னும் மன்னனைப் பற்றிய ஒரு வரலாற்றுச் செய்தி இடம்பெற்றுள்ளது. இவ்வரலாறு குறித்து உ.வே.சா. எடுத்துரைக்கும் கருத்து வருமாறு:

> நன்னன் என்னும் சிற்றரசன் ஒருவன் ஆற்றங்கரையில் இருந்த தன் தோட்டத்தில் அரிதின் வளர்த்த மா மரத்தின் காயொன்று அவ்வாற்றிலே வீழ்ந்து மிதந்து வர அதனை ஆற்றிற்கு நீராடச் சென்ற பெண் ஒருத்தி எடுத்துத் தின்றாள். அது கண்ட காவலர் அவளை நன்னன் முன் கொண்டு நிறுத்த, அவன் அவளுக்குக் கொலைத்தண்டம் விதித்தான்; அதனை அறிந்த அவள் தந்தை அவளது நிறைக்கேற்ற பொன்னால் செய்த பாவையையும், எண்பத்தொரு களிற்றையும் தண்டமாக இறுப்பதாகக் கூறவும், நன்னன் அதற்கு உடம்பாடமல் கொலை புரிவித்தான். அரசனைப் பிழைத்தவர் தம் நிறையுள்ள பொன்னால் பாவை செய்து தண்டமாக இறுத்தல் மரபு (ப.537)

என்று நன்னன் பெண்கொலை புரிந்த வரலாற்றுச் செய்தியைக் கூறுவதுடன், 'நன்னன் பெண்கொலை செய்த குற்றத்தால் அவனது குலத்தில் பிறந்தார், சான்றோரால் வரையப்படுதற்குக் காரணமாவார்' என்பதனையும் குறிப்பிட்டுள்ளார் உ.வே.சா.

## ஆதிமந்தி, வெள்ளிவீதியார், ஔவையார்

'நிலந்தொட்டுப் புகாஅர்' (குறுந். 130) எனத் தொடங்கும் வெள்ளிவீதியாரது பாடல்,

> நம் தலைவர் இவ்வுலகத்தில் ஏதேனும் ஒரு நாட்டிலுள்ள ஓரூரில் ஒரு குடியில் இருப்பர்; சாரணரைப் போல இவ்வுலகுக்குப் புறம்பே செல்பவரல்லர்; ஆதலின் எல்லா நாட்டிலும் உள்ள

> ஊர்கள் யாவற்றிலும் அமைந்த குடிகளையெல்லாம் தேடின் அகப்படாமற் போதற்கு நியாயமில்லை; அங்ஙனம் தேடித் தருவேன். நீ வருந்தற்க

என்று தோழி தலைவியை ஆற்றுவிப்பதாக அமைந்துள்ளது. இப்பாடலின் உரையில், உ.வே.சா. வெள்ளிவீதியார், ஔவையார், ஆதிமந்தியார் ஆகிய மூன்று பெண்பாற் புலவரைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளை எடுத்துரைக்கின்றார். அது வருமாறு:

> இச் செய்யுளைப் பாடிய வெள்ளிவீதியார் தம்முடைய கணவனைத் தேடித் திரிந்தாரென்றதொரு செய்தி,
>
> *நெறிபடு கவலை நிரம்பா நீளிடை*<br>
> *வெள்ளி வீதியைப் போல நன்றும்*<br>
> *செலவயர்ந் திசினால் யானே*<br>
> *(அகநா. 147: 8-10)*
>
> என்று ஔவையாரால் கூறப்பட்டுள்ளது. அகநானூற்றின் 45-ஆம் செய்யுளில் வெள்ளிவீதியார்,
>
> *ஆதி மந்தி போலப் பேதுற்று*<br>
> *அலந்தனென் உழல்வென் கொல்லோ*
>
> என்று பாடியுள்ளார். வெள்ளிவீதியார் தம் கணவனைத் தேடிய வரலாற்றை நோக்குமிடத்து அங்ஙனம் தேடுவதற்குமுன் அகநானூற்றின் 45-ஆம் செய்யுளையும், குறுந்தொகைச் செய்யுளாகிய இதனையும் கூறினரென்று தோற்றுகின்றது (ப.254).

*மள்ளர் குழீஇய விழவி னானும்*<br>
*மகளிர் தழீஇய துணங்கை யானும்*<br>
*யாண்டுங் காணேன் மாண்டக் கோனை*<br>
*யானுமோர் ஆடுகள மகளே யென்கைக்*<br>
*கோடீர் இலங்குவளை நெகிழ்த்த*<br>
*பீடுகெழு குரிசிலுமோர் ஆடுகள மகனே (குறுந்.31)*

என்று ஆதிமந்தியார் பாடிய பாடல் குறித்து உ.வே.சா.

> இது காதலற்கெடுத்த ஆதிமந்தி பாட்டு; இவை தத்தம் பெயர் கூறிற் புறமாமென்று அஞ்சி வாளாது கூறினார். ஆதிமந்தி தம் பெயரானும் தம் காதலனாகிய ஆட்டனத்தி பெயரானும் கூறிற் காஞ்சிப்பாற்படும்' (ப.73)

என்று விளக்கம் அளித்துள்ளார்.

ஆதிமந்தியார் வரலாற்றினைப் 'பாடினோர் வரலாறு' பகுதியிலும் குறித்துள்ளார் உ.வே.சா.

> நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியலார்களுள் இவர் ஒருவர். இவர் பெயர் மந்தி எனவும் வழங்கும். வஞ்சிக் கோனாகிய ஆட்டனத்தி என்பானை இவர் மணந்தவர். அவன் பெயர் அத்தி எனவும் வழங்கும். ஒரு சமயம் ஒரு நீர் விழாவில் கழார் என்னும் ஊரைச் சார்ந்த காவிரித் துறையில் கணவனுடன் இவர் நீராடுகையில், கணவனைக் காவிரி வெள்ளத்தில் கவர்ந்து கொண்டது என்பதும் அதனால் மந்தியார் தம் கணவனைக் காணாது கவன்று பலவிடத்தும் தேடித் தேடிச் சென்று முடிவில் கடற்கரையில் அரற்றி நின்றார் என்பதும், அப்போது இவரது கற்பின் பெருமையால் கடல், கரைக்கணித்ததாக அவனைக் கொணர்ந்து நிறுத்தக்கண்டு இவர் மகிழ்ந்து தழுவிச் சேர்ந்தனர் என்பதும் அகநா.45, 76, 222, 236, 276, 396-ஆம் பாடல்களாலும் 'இது (குறுந். 31) காதலற் கெடுத்த ஆதிமந்தியார் பாட்டு' என்ற நச்சினார்க்கினியர் உரையினாலும் (தொல்.அகத்.54), சிலப்-21:11-5-ஆம் அடிகளாலும் உணரப்படும். அகநா. 147-ஆம் பாடலால் ஔவையாருக்குக் காலத்தால் முந்தியவர் வெள்ளிவீதியார் என்பதும், அகநா.45-ஆம் பாடலால் வெள்ளிவீதியாருக்குக் காலத்தால் முந்தியவர்கள் ஆதிமந்தியார் என்பதும் விளங்குகின்றன (பக்.cxiii-cxiv).

## பாடலி நகர்

*நீகண் டனையோ கண்டார்க்கேட் டனையோ*
*ஒன்று தெளிய நசையின மொழிமோ*
*வெண்கோட் டியானை சோணை படியும்*
*பொன்மலி பாடலி பெறீஇயர்*
*யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே* (குறுந். 75)

என்பது தலைமகன் வரவு உணர்த்திய பாணற்குத் தலைவி கூறுவதாக அமைந்த பாடல். இப்பாடலில் சோணையாற்றங் கரையில் உள்ள பொன்மலி மிக்க பாடலி புத்திர நகரம் பற்றிய குறிப்பு அமைந்துள்ளது. இதனை உ.வே.சா.,

> சோணை - ஒரு நதி (சிலப்.5: 99-100; அடியார்.) இதன் வடகரையிலுள்ளது பாடலிபுத்திரமென்னும் நகரம். பழைய காலத்தில் மகத நாட்டின் தலைநகரமாக இருந்தது. இது பாடலியென்று வழங்குதலும் பொன்னாற் சிறப்புடையதென்பதும்,
>
> *பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்*
> *சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை*
> *நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ*
> *(அகநா.265: 4-6)*
>
> *பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞரும்*
> *(பெருங்.1.58:42)*
>
> என்பவற்றால் அறியப்படும் (ப.153)

என்று எடுத்துரைக்கின்றார். இக்குறிப்பே, சங்க காலத்தைக் கி.மு. 5-ஆம் நூற்றாண்டளவில் நிலைநிறுத்துவதற்குத் துணை புரிகின்றது என்று கூறுகிறார் மூதறிஞர் தமிழண்ணல். (தொல்காப்பியத் தோற்றம், ப.23).

*மகிழ்நன் மார்பே வெய்யை யானீ*
*அழியல் வாழி தோழி நன்னன்*
*நறுமா கொன்று நாட்டிற் போகிய*
*ஒன்றுமொழிக் கோசர் போல*
*வன்கண் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே* (குறுந். 73)

என்பது பரணர் பாடிய பாடல். இப்பாடலில் கோசர் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. இவர்கள் நன்னன் என்னும் அரசன்பாற் பகைமை கொண்டவர் என்பதும், இம்மன்னனுக்குரிய காவல் மரமாகிய மாமரத்தை வெட்டி விட்டு இவனது நாட்டிற் புகுந்தனர் என்றும், இவர்கள் பொய்யாத வாய்மொழியையும் வன்கண் சூழ்ச்சியையும் உடையவர்கள் என்றும் இப்பாடலில் குறிப்பிடப்படுகின்றனர். 'நாலூர்க் கோசர் நன்மொழி போல வாயா கின்றே' (குறுந்.15) என்று பிறிதொரு பாடலிலும் கோசர் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது.

> 'ஒன்றுமொழி - இரண்டுரையாமல் ஒன்றையே மொழிதல்; இது பற்றியே வஞ்சினத்திற்கு இப்பெயர் வந்ததென்று தோன்றுகின்றது... ஒன்றுமொழி – ஒன்றையே கூறும் வாய்மையெனினும் ஆம்' (ப.150)

என்று கோசர் போன்றே வடுகர், பூழியர், வேளிர், தொண்டையர், கொங்கர் முதலான பல இனத்தவர் பற்றிய செய்திகளும், கடையெழு வள்ளல்களான பாரி, ஓரி, நள்ளி, ஆய், அதிகன், அழிசி, அகுதை,

குட்டுவன், சேந்தன், மலையன், விச்சிக்கோ முதலான பல அரசர்களையும் பற்றிய குறிப்புகள் குறுந்தொகையில் கூறப்பட்டுள்ளன.

## வடுகர்

*குல்லைக் கண்ணி வடுகர் முனையது*
*பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்*
*மொழிபெயர் தேஎத்த ராயினும்*
*வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே (குறுந்.11)*

என்பது தலைமகள், தன் நெஞ்சிற்குச் சொல்லுவாளாய்த் தோழி கேட்பச் சொல்லியது என்னும் துறைக் குறிப்பில் அமைந்த மாமூலனார் பாடல். இப்பாடலில் வடுகர் என்ற இனத்தாரைப் பற்றியும் கட்டி என்னும் படைத்தலைவன் பற்றிய குறிப்பும் இடம்பெற்றுள்ளன.

> 'வடுகர் - இவர் வேங்கடத்தின் வடக்கே இருந்த ஒரு சாதியார்; மிக்க வீரமும் வன்மையும் உடையவராகச் சொல்லப்படுகின்றனர்; இவருள் ஒரு சாரார் வேட்டை ஆடும் தொழில் உடையார்; அதன் பொருட்டு நாய்களையும் உடன்கொண்டு வருவர்; இவரை 'வம்ப வடுகர்' என்றும் நூல்கள் கூறும்.
>
> கட்டி-இவன் சேரனுடைய படைத்தலைவர்களுள் ஒருவன்; கங்க நாட்டிற்குத் தலைவனாகச் சொல்லப்படுகின்றான். மொழிபெயர் தேஎம் - மொழி வேறுபட்ட நாடு, இதனால் கட்டியினுடைய நாடும் வடுகரது நாடும் வேற்று மொழியை உடையன என்பது பெறப்படும்.
>
> "குட்டுவன்-குட்ட நாட்டை உடையோன் (மதுரைக்.105, ந.); இந்நாடு மலைநாட்டின் ஒரு பகுதி. குட்டுவன் என்னும் பெயர் சேரர்களுக்கு உரியதாக வழங்குகின்றது; செங்குட்டுவன், பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்னும் சேரவரசர்கள் பெயர் அமைப்பு இதனைத் தெளிவுறுத்தும்" (ப.80).

இங்ஙனம் பல வரலாற்றுக் குறிப்புகள் உ.வே.சா.வின் உரையில் காணப்படுகின்றன.

## நாகரிகம், பண்பாடு, பழக்க வழக்கங்களைச் சுட்டுதல்

குறுந்தொகைப் பாடலின் வழி வெளிப்படும் சங்ககால மக்களின் நாகரிகம், பண்பாடு, பழக்க வழக்கங்கள், உணவு, உடை

போன்ற பல்வேறு செய்திகளையும் உ.வே.சா. தமது உரையில் கூறிச்செல்கின்றார்.

விருந்தோம்புதலை உயர்ந்த பண்பாடாகப் போற்றி வந்தனர் தமிழர்கள் என்பதற்குக் குறுந்தொகைப் பாடல்கள் சான்று பகர்கின்றன. இரவு நேரத்தில் 'புறத்தே யாரேனும் உள்ளீரோ?' என்று வினவி யாவரையும் அழைத்து உண்பிக்கும் வழக்கம் அக்காலத்து நிலவியது என்பதை,

*பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்*
*வருவீர் உளீரோ எனவும்* (குறுந். 118)

என வரும் குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்றது. இப்பாடலுக்கு உரைவகுத்த உ.வே.சா

> தன் வீட்டில் விருந்தினர் பலர் வந்து உண்ணுவராதலின், அவர் தடையின்றிப் புகும் வாயிலைப் பலர்புகு வாயிலென்றாள். இராக் காலத்தில் விருந்தினர்களைப் புகவிட்டுப் பின்னும் எவரேனும் உள்ளாரோ என ஆராய்வாராகி, ஏவலாளர்கள் வினவி, ஒருவரும் இலராக, வாயிற்கதவை அடைத்தனர் (ப.233)

என்று தமிழரின் மிக உயர்ந்த விருந்தோம்பற் பண்பினைப் போற்றுகின்றார்.

ஈதலாகிய பேரறத்தை அக்கால மக்கள் பெரிய கடைப்பிடியாகக் கொண்டு வாழ்ந்தனர். இரவலர் வாரா நாளைப் பயனற்ற நாளாகக் கருதினர். பாலை பாடிய பெருங்கடுங்கோ, தம் பாடல் ஒன்றில் 'நீ தனிமையால் வருந்த யான் நின்னைப் பிரிந்து சென்ற இடத்தே மனம் பொருந்தியிருப்பேனாயின், இரவலர் என்னைத் துறந்து வாராத நாட்கள் பல ஆகுக' என்று தலைவன் வஞ்சினம் கூறுவதாகப் பாடுகிறார்:

*மெல்லியல் அரிவைநின் நல்லகம் புலம்ப*
*நிற்றுறந்து அமைகுவெ னாயின் எற்றுறந்து*
*இரவலர் வாரா வைகல்*
*பலவா குகயான் செலவுறு தகவே* (குறுந். 137)

> இரப்போரைக் காணாமலும், இரப்போர்க்கு ஈயாமலும் இருக்கும் நாள் கெட்ட நாளென்பது கருதி வஞ்சினங் கூறுவோர் இங்ஙனம் குறிப்பது மரபு:

*புரப்போர் புன்கண் கூர*
*இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே*
*(புறநா.72:17-18)*

என்னும் புறநானூற்றுப் பாடலையும் சான்று காட்டி விளக்குகின்றார் உ.வே.சா. (ப.267).

பொருளை அறத்தின் பொருட்டுத் தேடுதலே பண்டைய வழக்கமாக இருந்தது. தம் முன்னோர்கள் ஈட்டி வைத்த செல்வத்தைச் செலவழித்தல் பிழை என்ற கொள்கையும் அக்காலத்து நிலவியது என்பது

*உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்*
*இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு (குறுந். 283)*

என்னும் பாடலால் அறியலாம்.

முன்னோரால் ஈட்டி வைத்த பொருள் கொண்டு
இல்லறம் நடத்துதல் முறையன்றென்பது
பண்டையோர் கொள்கை (ப.521)

என இதனைக் குறிப்பிடுகிறார் உ.வே.சா.

பொதுவாக, மக்களிடத்தே காணப்படும் சில பழக்க வழங்கங்களை இந்நூலால் அறிய முடிகின்றது.

- பறையும், சங்கும் ஆர்ப்பத் திருமணம் புரியும் வழக்கம் அக்காலத்து இருந்ததைப் 'பறை முழங்க பணிலம் ஆர்ப்ப' என்னும் பாடலடியால் அறியமுடிகின்றது. மணம் செய்த பின்னர் மகளின் சிலம்பைக் கழிக்கும் ஒரு வகையான நோன்பு பண்டைக் காலத்தில் செய்யப்பட்டது.
- திருமணம் ஆகாத கன்னி மகளிர் பிறைதொழும் வழக்கம் இருந்தது.
- நீராடும் பொழுது, கூந்தலில் உள்ள எண்ணெய்ப்பசை, சிக்கு முதலியன போகும் பொருட்டுக் களிமண்ணைத் தேய்த்துக்கொண்டு மகளிர் நீராடுதல் வழக்கு (ப.224); நீராடிய பின்னர் அகிற்புகையாலும், சந்தனப் புகையாலும் கூந்தலை உலர்த்தியும், எண்ணெய் தடவி வாரிப் பூ அணிந்தும் தம் கூந்தலை அலங்கரித்துக் கொள்ளும் வழக்கம் இருந்தமையைக் குறுந்தொகைப் பாடல்கள் வழி அறிய முடிகின்றது.
- புலிப்பல்லைப் பொன்னில் அமைத்துச் சிறுவர் மார்பில் அணிவித்த வழக்கம் 'புலிப்பல் தாலிப் புதல்வன்' (பா.161) என்பதனால் அறிய முடிகிறது.

- மகளிர் விழாக் காலத்தே துணங்கை ஆடுதலும் ஆடவர் அவர்கட்கு முதற்கை கொடுத்தலும் பண்டை வழக்கங்கள் (ப.72) (துணங்கை - ஒரு வகைக் கூத்து; இதனைச் சிங்கிக் கூத்தென்பர்.)
- உப்பை விற்று வெண்ணெல்லைப் பண்டமாற்றாகப் பெறும் வழக்கத்தை,

*... ... ... யாயும்*
*உப்பை மாறிவெண்ணெற் றரீஇய*
*உப்புவிளை கழனிச் சென்றனள்* (குறுந். 269)

என்னும் பாடல் எடுத்துரைக்கின்றது (ப.496) ('உப்பை விற்று நெல்லைப் பெறுதல்'- 'உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு', 'நெல்லி னேரே வெண்கல் உப்பெனச், சேரி விலைமாறு கூறலின்; 'நெல்லும் உப்பும் நேரே யூரீர் கொள்ளீரோவெனச் சேரிதொறு நுவலும்" (அகநா. 60, 140, 390)' எனவரும் பிற பாடல் சான்றுகளும் இதனை உணர்த்துகின்றன.

சுடலையைக் கண்டு அகன்று செல்லுதல், கலத்தில் பால் கறத்தல் (27), முன்றிலில் தானியத்தை உலர்த்துதல், முதியோர் சென்று மணம் பேசுதல் முதலான சில வழங்கங்களையும் இந்நூலின் வழி அறிய முடிகிறது.

## நிமித்தங்கள்

ஒரு நல்ல செயலைச் செய்யத் தொடங்குமுன், நல்ல நாள், நல்ல நேரம் பார்க்கும் வழக்கம் இன்றும் மக்களிடையே காணப்படுகிறது. நிமித்தம் பார்த்தல் புள் என்றும், விரிச்சி என்றும் கூறப்படுகிறது.

> முதலில் பறவைகளால் நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டாயினமையின் அப்பறவையைக் குறிக்கும் புள் என்னும் பெயரால் அது வழங்கப்பெற்று, அப்பால் வேறு பலவகை நிமித்தங் களுக்கும் அதுவே பெயராக வழங்கலாயிற்று என்று தோன்றுகின்றது.

(நூலாராய்ச்சி, ப.cxiii) என்று நிமித்தம் பார்க்கும் வழக்கம் ஏற்பட்ட தன்மையை விளக்குகிறார் உ.வே.சா. குறுந்தொகையில், பாலை நிலத்தில் செல்பவர்கள் ஓந்தியை நிமித்தப் பொருளாகக் கொள்வர் என்பது,

*... ... ... ஓதி முதுபோத்து*
*ஆறுசெல் மாக்கள் புட்கொளப் பொருந்தும்* (குறுந். 140)

என்னும் பாடலில் வெளிப்படுகின்றது. இவ்வோந்தி நிமித்தத்தையும் புள் என்றே வழங்கியுள்ளனர்.

> பறவைகளால் நிமித்தம் பார்த்தலை,
> *குருகும் இருவிசும்பு இவரும்* *(குறுந். 260)*

என்னும் பாடலடியால் அறியலாம்.

காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்பது நம் நாட்டினர் நம்பிக்கை. ஒரு பெண் புலவர் அங்ஙனம் விருந்து வரக் கரைந்த காக்கையை நன்றியுடன் பாராட்டி உரைக்கின்றார்.

> *திண்டேர் நள்ளி கானத் தண்டர்*
> *பல்லா பயந்த நெய்யிற் றொண்டி*
> *முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு*
> *எழுகலத் தேந்தினுஞ் சிறிதென் தோழி*
> *பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு*
> *விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே (குறுந். 210)*

> 'காக்கைக்கு இடும் உணவைப் பலியென்றல் மரபு. காக்கை கரைதல் புதியதோர் வரவைக் குறிக்கும் நிமித்தமென்பர்... காக்கையை இங்ஙனம் பாடிய சிறப்பால் இச்செய்யுளைப் பாடியவர் காக்கைபாடினியாரென்னும் பெயரைப் பெற்றார்

(பக்.395-396) என்று எடுத்துரைக்கின்றார் உ.வே.சா.

**பல்துறைப் புலமை**

> *ஒரு நூல் இலக்கிய அறிவை மாத்திரம் தருவதில்லை. மக்கள் வாழ்வின் பல்வேறு கூறுகளும் அமையப் படைப்பது தான் இலக்கியம். **பல்துறைப் புலமை** அத்தகைய இலக்கியக் கலைக்குப் பொருள் காண வேண்டும் எனின், பொருள் காண்பார்க்குப் பல துறையறிவு வேண்டும் என்பது தானே விளங்கும்'*

என்பர் அறிஞர் வ.சுப.மாணிக்கம் உ.வே.சா.வின் குறுந்தொகை உரையில் இத்தகைய பல்துறைப் புலமை வெளிப்படுவதைக் காணமுடிகிறது. ஒரு சில எடுத்துக்காட்டுக்கள் வருமாறு:

> *அம்ம வாழி தோழி காதலர்*
> *இன்னே கண்டுந் துறக்குவர் கொல்லோ*

*முந்நால் திங்கள் நிறைபொறுத்து அசைஇ*
*ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்*
*கடுஞ்சூல் மகளிர் போல நீர்கொண்டு*
*விசும்பிவர் கல்லாது தாங்குபு புணரிச்*
*செழும்பல் குன்ற நோக்கிப்*
*பெருங்கள வானம் ஏர்தரும் பொழுதே (குறுந். 287)*

என்பது கச்சிப்பேட்டு நன்னாகையார் பாடிய பாடல். இப்பாடலில் 'மகளிர் பன்னிரண்டு திங்கள் கருவுற்றிருத்தலும் உண்டு' என்னும் அரிய செய்தியையும், 'வயாநோயுடையார் புளித்த சுவையை உடைய பொருள்களை விரும்புதல் இயல்பு' என்பதையும் தம் உரைக்குறிப்பில் தந்து செல்கின்றார் உ.வே.சா. நிறை என்பதற்கு நிறைந்த கருப்பம் என்றும், கடுஞ்சூல் மகளிர் என்பதற்கு முதற்சூல் கொண்ட மகளிர் என்றும், பசும்புளி என்பதற்குப் பச்சைப் புளியங்காய் என்றும் பொருள் தருவதோடு தாம் கூறும் செய்திக்கேற்ற இலக்கிய மேற்கோள் களையும் சுட்டிச்செல்கின்றார் அவர். பன்னிரு மாதக் கடுஞ்சூல் என்பதற்கு,

*பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டஅப் பாங்கினால்*
*என்னிளங் கொங்கை அமுத மூட்டி யெடுத்துயான்*
*பொன்னடிநோவப் புலரியே கானிற் கன்றின்பின்*
*என்னிளஞ் சிங்கத்தைப் போக்கினே னெல்லே பாவமே*
*(பெரியாழ். 3:2:8)*

என்னும் பெரியாழ்வார் பாடிய பாசுரத்தை மேற்கோள் காட்டுகிறார் உ.வே.சா. வயாநோயுடையார் புளித்த சுவையை உடைய பொருள்களை விரும்புதல் இயல்பு என்பதற்கு,

*நீருறை கோழி நீலச் சேவல்*
*கூருகிர்ப் பேடை வயாஅம் ஊர*
*புளிங்காய் வேட்கைத் தன்றுநின்*
*மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே (ஐங்.51)*

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலையும்,

*வயாவுநோய் நிலையாது,*
*வளைகாய் விட்ட புளியருந் தாது (கலி.7:5-6)*

*பொய்த்துயில் கொண்டு புளிக்கும் உவந்தாள்*
*(பிரபு. மாயை உந்து. 27)*

ஆகிய பாடல்வரிகளையும் சான்று காட்டியுள்ளார் உ.வே.சா.

ஆமைப் பார்ப்பு தாய்முகம் நோக்கி வளரும் தன்மை கொண்டது என்பதனை,

*யாமைப் பார்ப்பின் அன்ன காமம்* (குறுந். 152)

என்னும் பாடல் உரையில் புலப்படுத்தியுள்ளார் உ.வே.சா.

'மகப்பேறு மருத்துவ மனை' என்று குழந்தைப் பேறு நிகழும் இடத்தைக் குறிப்பிடுகிறோம். 'ஈன்இல்' என்னும் அருமையான சொல்லாட்சியைக் குறுந்தொகை மூலம் அறிய முடிகின்றது.

*யாரினும் இனியன் பேரன் பினனே*
*உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்*
*சூன்முதிர் பேடைக்கு ஈனில் இழைஇயர்*
*தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கடும்பின்*
*நாறா வெண்பூக் கொழுதும்*
*யாணர் ஊரன்* (குறுந். 85)

ஈன்இல்-முட்டையை ஈனும் இடம். அது மெத்தென இருத்தல் வேண்டுமாதலின் கரும்பின் பூவைச் சேவல் கொழுதியது (ப.173)

என்று இப்பாடலின் உரையில், குருவிச் சேவல் ஈனில் அமைக்கும் முறையை எடுத்துரைக்கிறார் உ.வே.சா.

*குக்கூ வென்றது கோழி யதனெதிர்*
*துட்கென் றன்றென் தூய நெஞ்சம்*
*தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்*
*வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே* (குறுந். 157)

என்பது 'பூப்பெய்திய தலைமகள் உரைத்தது' என்னும் துறையில் அமைந்த பாடல். தலைவனை ஆரத்தழுவி உடன் உறைய விரும்பும் ஒரு தலைவி, பள்ளியறையில் அவ்வாறு உடன் உறைந்திருக்கும் வேளையில் பூப்பு வந்துற்றது அறிந்து நெஞ்சம் கலங்குகிறாள். இவ்வுடற்கூற்றால், தலைவனைச் சில நாள் பிரிய வேண்டுமே என்று வருந்துகிறாள்; பூப்பு நேர்ந்த வைகறைப் பொழுதினைத் 'துண்டிக்கும் வாள்' எனப் பழித்துரைக்கிறாள். 'தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்' என்ற அடைமொழியினால் பூப்பு வந்தபோது, இருவரும் இணைந்திருந்த நிலையினைச் சுட்டுகிறாள். ஒரு பெண்ணுக்கு உரிய வேட்கை மிகுதியும் நாண மிகுதியும் இப்பாட்டில் வெளிப்படுகின்றன.

'அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்' என்பது விதியாதலின், தலைவி தான் பூப்பெய்தியதை வெளிப்படையாகக் கூறாதொழிந்தாள்... பூப்புக் காலமாகிய மூன்று நாளும் தலைவியினது

சொற்கேட்கும் அணிமையில் இருத்தலையன்றி அளவளாவுதல் அறநெறியன்றாதலின் பூப்பு, த்லைவனைத் தோள் தோயாமற் பிரிப்பதாயிற்று; முந்நாளுங் கூடி உறையப் படுங் குற்றமென்னோவெனின் பூப்புப் புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றில் அழியும்; இரண்டாம் நாள் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நின்ற கரு குறுவாழ்க்கைத்தாம்; வாழினுந் திருவின்றாம். அதனாற் கூடப்படாதென்பது;

*'பூப்புமுதன் முந்நாட் புணரார் புணரின்*
*யாப்புறு மரபின் ஐயரும் அமரரும்*
*யாத்த கரணம் அழியும் என்ப'*

எனப் பிறரும் ஓதினராதலாகலான் அமையாதென்பது' (இறை.43 உரை) என்பதனாற் பூப்புநாட்களில் கூட்டமின்மை உணரப்படும் (ப.302) என்று உடற்கூற்று மருத்துவ அடிப்படையில் உரைவிளக்கம் தந்து செல்கின்றார் உ.வே.சா.

ஓர் ஆண்பாற் புலவரால் இத்தகையதொரு பெண் உள்ளத்தைச் சித்திரித்தல் இயலாது.

*புலவர் எம் மாந்தரையும் பாடலாம். தலைவன், தோழன் முதலான ஆண்மாந்தர்களை ஆண்பாற் புலவர் பாடும்போது ஆணுள்ளம் நன்கு வெளிப்படும் எனவும், தலைவி, தோழி, செவிலி முதலான பெண் கூற்றுக்களைப் பெண்புலவர்கள் பாடுங்கால் பெண்மனம் இயல்பாக விழும் எனவும் பொதுவாகக் கொள்வதில் தவறில்லை*[2]

என்னும் வ.சுப.மாணிக்கனாரின் கூற்று இங்கே நினையத்தகும்.

*நிலந்தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்*
*விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்*
*நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்*
*குடிமுறை குடிமுறை தேரிற்*
*கெடுநரும் உளரோ நங்காத லோரே (குறுந். 130)*

என்னும் வெள்ளிவீதியார் பாடிய பாடல், தோழி தலைமகளுக்கு ஆறுதல் கூறும் வகையில் அமைந்துள்ளது. இப்பாடலுக்கு விளக்கமளிக்குமிடத்து, புத்தபெருமான் நிகழ்த்திய சித்தி வகைகளை எடுத்துரைக்கிறார் உ.வே.சா.

*நிலந்தொட்டுப் புகுதல் முதலிய மூன்று அற்புத சக்திகளும் சித்தி வகைகள்; இவற்றை இருத்தி யென்பர். சைனர்கள் இத்தகைய சித்திகளைப் பெற்ற சாரணரெண்மரென்பர், பௌத்திகர்களும் இத்தகைய சித்திகளைப் பற்றிப் பாராட்டுவர். தம் தந்தையாகிய சுத்தோதனனுக்கு ஞானம் உண்டாக்குதற்பொருட்டு இத்தகைய அற்புதங்களைப் புத்தர் காட்டினாரென்று அசுவகோஷ போதிசத்துவரென்பவரால் இயற்றப் பெற்ற புத்தசரிதத்தின் 19-ஆம் வர்க்கம் தெரிவிக்கின்றது.*[3]

மணிமேகலை நூலைப் பதிப்பிக்கும் வேளையில் பௌத்த மதக் கருத்துக்களை ஊன்றிப் படித்ததும், இலங்கையில் இருந்த தம் நண்பர்கள் மூலம் பௌத்த மதக் கருத்துக்களைக் கேட்டு அறிந்தமையும் உ.வே.சா.வுக்குத் துணைநின்றமை இப்பாடலால் அறியமுடிகிறது.

*யானையங்குருகு: இதனை வண்டாழ்ங் குருகு என்பர் நச்சினார்க்கினியர். (மதுரைக். 674 உரை.) திருவோண நட்சத்திரத்திற்குரிய புள்ளாகச் சோதிட நூலார் கூறுவர். 'குஞ்சரக் குரல குருகு' என ஒரு பறவை அகநானூற்றிற் (145 : 15) கூறப்படுகிறது. அக்குருகே யானையங் குருகாயின், யானையைப் போன்ற குரல் உடைமை பற்றி இப்பெயர் பெற்றதென்று கொள்வதற்கு இடம் உண்டு. ஆனைச்சாத்தன் என்னும் பறவை (திருப்பாவை) இது போலும்.*[4]

*யாஅம்: இது பாலை நிலத்திலுள்ளதொரு மரம்; யாவெனவும் வழங்கும், அவ்வழக்கு விளா விளாம், மரா மராமெனச் சில மரப்பெயர்கள் வழங்கி வரும் முறையைப் போன்றதென்று தோற்றுகின்றது. இம் மரத்தின் பட்டை நீர்ப்பசை மிக்கதென்று தெரிகின்றது.*[5]

இங்ஙனம் பயிரியல், உயிரியல், மருத்துவம், சோதிடம், உடற்கூற்றியல் முதலான பல துறைப் புலமையும் உ.வே.சா.வின் உரையில் புலப்படுகின்றது.

## அடைமொழி நயம்

குறுந்தொகைப் பாடல்கள் பயில்வார் நெஞ்சைக் கவரும் வண்ணம் பலப்பல அழகிய அடைமொழிகளைக் கொண்டுள்ளன. அவ் அடைமொழிகளுக்கு அழகான - நயமான - உரை விளக்கங்கள் எழுதியுள்ளார் உ.வே.சா. சில சான்றுகள் வருமாறு:

- கல்லா வன்பறழ் (குறுந்.69) - மரமேறுதல் முதலிய தம் தொழிலைக் கல்லாத வலிய குட்டி.
- வெவ்வாய்ப் பெண்டிர் (குறுந்.373): அலர் கூறுதலால் வெம்மையையுடைய வாய்; அவர் கூறும் அலர் நெஞ்சைச் சுடுவதாதலின் தோழி இங்ஙனம் கூறினாள் (ப.665).
- இன்னுயிர் கழியினும் உரையல் (குறுந்.93) – தோழி, எல்லாவற்றினும் இனிய உயிர் நீங்கினாலும் தலைவர்பால் பரிவு கூர்ந்த சொற்களைச் சொல்லற்க.
- திண்தேர்ப் பொறையன் (குறுந்.128) : போர்க்களத்தில் மேடும் பள்ளமுமாகிய இடங்களில் ஓடினும் சிதைவின்றித் திண்ணியதாகும்.
- அமிழ்தத்து அன்ன அந்தீங் கிளவி (குறுந்.206) : அழகிய இனிய சொல்; அழகு பொருளால் அமைந்தது; இனிமை மென்மையால் அமைந்தது.
- இன்கடுங்கள் (குறுந்.298): உண்ணற்கினிமையும், மயக்கந் தருதலிற் கடுமையும் உடைய கள்.
- மனையுறை மகளிர் (குறுந்.135) : மனையிலிருந்து கற்பொழுக்கம் தவறாத மகளிர்.
- 'அரும்பெற லமிழ்தம்' (குறுந்.83) : பெரும்புண்ணியம் செய்தார்க்கே அமுதவுணவு பெறற்குரியதாதலின் 'அரும்பெறலமிழ்தம்' (ப.169)
- பெரும்பெயர் உலகம் (குறுந்.83) : பெரிய புகழையுடைய உலகம்; என்றது சுவர்க்கத்தை. (ப.169)

## தொடர் நயம்

'கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி' எனத் தொடங்கும் குறுந்தொகை 2-ஆம் பாடலை இயற்றியவர் இறையனார். இப்பாடலை 'ஆலவாய் இறையனார் தருமி என்னும் பிரமசாரிக்குப் பொற்கிழி வாங்கிக் கொடுத்த சிந்தாசமுத்தி அகவல்' என்று தமிழ் நாவலர் சரிதை கூறும். அறிஞர் மு.வரதராசனார் இப்பாடலை விரிவாகவும் முழுமையாகவும் திறனாய்ந்து 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் தலைப்பில் தனி ஒரு நூலே வெளியிட்டுள்ளார். இப்பாடலில் வரும் தலைவன் மணமிக்க மலர்களின் பூந்தாதை ஆராய்ந்து உண்பதையே வாழ்க்கையாகக் கொண்ட வண்டினைப் பார்த்து, 'எது மணமிக்கது? என் அரிவை கூந்தலா? நீ அறியும் பூவா?' என்று கேட்கிறான்.

*கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி*
*காமம் செப்பாது கண்டது மொழிமோ (குறுந்.2)*

என்பது அவன் கூற்று. இதில் 'காமம் செப்பாது' என்னும் தொடருக்கு உ.வே.சா. எழுதியுள்ள விளக்கம் நயமானது. "என் நிலத்து வண்டாதலின் யான் விரும்பியதையே கூறாமல், நீ கண்கூடாக அறிந்ததையே சொல்வாயாக!" (ப.8) என்று கூறுகிறானாம் தலைவன்.

*ஒடுங்கீர் ஓதி ஒண்ணுதற் குறுமகள்*
*நறுந்தண் ணீரள் ஆரணங் கினளே*
*இனையள் என்றவட் புனையள வறியேன்*
*சிலமெல் லியவே கிளவி*
*அணைமெல் லியள்யான் முயங்குங் காலே' (குறுந். 70)*

என்று தலைவியோடு கண்டு கேட்டு உண்டு, உயிர்த்து, உற்று அறியும் இன்புற்று நீங்கும் தலைவன், தலைவியைப் புகழுமாறு அறியேன் என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறி மகிழ்வதாக அமைந்துள்ளது ஓரம்போகியார் பாடிய பாடல். இத்தொடருக்கு,

*ஓதி, ஒண்ணுதற் குறுமகளென்றமையின் காட்சியின்பமும், சில மெல்லியவே கிளவி யென்பதனாற் கேள்வியின்பமும், தண்ணீரள் அணை மெல்லியளென்றமையால் ஊற்றின்பமும், நறுநீரளென்றமையின் உயிர்ப்பின்பமும், யான் முயங்குங் காலென்பதனாற் குறிப்பாகச் சுவை இன்பமும் ஒருங்கே பெறுதலை உணர்த்தினான்'*

என்று தலைவி கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனுக்கும் இன்பம் தருபவள் என்னும் கருத்தைப் புலப்படுத்தும் வகையில் உரை வரைந்துள்ளார். மற்றும் சில தொடர் நயங்கள் வருமாறு:

- 'உள்ளின் உள்ளம் வேமே' (குறுந். 101) – உள்ளம் வேதலாவது புறத்தே துன்பம் தோற்றாவாறு உள்ளத்துள்ளே துயரத்தை அடக்கி நிற்றல்.
- 'அரிதுபெறு சிறப்பின் புத்தேள் நாடு' (குறுந்.101):தானம் தவம் முதலிய செய்தே அடைய வேண்டுதலின் 'அரிது பெறு சிறப்பின் புத்தேள் நாடு' என்றான் தலைவன்.
- 'இரண்டறி கள்விநம் காத லோளே' (குறுந். 312): இரவில் தனக்குப் பொருந்தியும் பகலில் தமர்க்குப் பொருந்தியும் ஒழுகும் இரண்டு தன்மையினள் ஆதலின், 'இரண்டறி கள்வி'

என்றான் (தலைவன்). தன்னோடுள்ள தொடர்பு தமருக்குப் புலப்படாவாறு கரந்து ஒழுகுதல் பற்றிக் ‘கள்வி’ என்றான் (ப.570).

‘இருபேராண்மை செய்த பூசல்’ (குறுந்.43) — ஆண்மையென்பது ஆளுந்தன்மை யென்னும் பொருளில் இருபாலையும் உணர்த்தி நின்றது... ‘இவர் நம்மைப் பிரியார்’ என்னும் ஊக்கத்தையும், ‘இவளுக்குச் சொல்லாமலே போவேம்’ என்னும் துணிவையும் முறையே இருவர்பாலும் உண்டான ஆண்மை யென்றாள். ஆண்மையென்பது இருபாலார்க்கும் உரியதென்பது – தலைவன் தலைவியரிடையே உள்ள ஒப்பினது வகையைக் கூறவந்த தொல்காப்பியர் ‘பிறப்பே குடிமையாண்மை’ என்று கூறுவதாலும், அதன் உரையிற் பேராசிரியர் ‘ஆண்மை புருடர்க்காம், அஃது ஆள்வினை யெனப்படும். இது தலைமகட் கொப்பதன்றாலெனின் குடிமை யாண்மை (தொல்.கிளவி.56) யென்புழி ஆண்மையென்பது இருபாற்கும் ஒக்குமாதலின் அமையுமென்பது’ என்றெழுதிய பகுதியாலும் தெளியப்படும் (ப.97).

‘யாயா கியளே மாஅ யோளே’ (குறுந். 9): தலைவியை யாயென்றது, புலத்தற்குக் காரணமான பரத்தைமை தலைவன்பால் உளதாகவும், அதை மனங்கொள்ளாத கற்பின் சிறப்பை நோக்கி (ஐங்.1, உரை). மாயோள் - மாமை நிறத்தை உடையவள்; மாமை நிறம் என்பது மாந்தளிர் போன்ற அழகிய நிறம்;அஃது இலாவணியம் எனப்படும் (ப.24).

இவை போன்ற பல தொடர் நயங்களை உ.வே.சா.வின் உரையில் பரக்கக் காணலாம்.

## நிரல் நயம்

*விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது*
*சொல்லுதல் வல்லார்ப் பெறின்* (குறள்.648)

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப, முறையாக இனிது சொல்லப்படும் கருத்துக்களை உலகம் விரைந்து கேட்கும். குறுந்தொகைப் பாடல்களில் அமைந்துள்ள நிரல்நயங்களை நயமாகச் சுட்டிச் செல்கிறார் உ.வே.சா. ‘வரைவு நீட்டியவிடத்து ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி வரைவு மலிவு கூறியது’ என்னும் துறையில் அமைந்துள்ளது குன்றியனார் இயற்றிய பாடல், தலைவன் தலைவியைத் திருமணம் செய்து கொள்ளுதற்குரிய முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறான்; தலைவியோ அவன் விரைந்து வந்து தன்னை

வரைந்து கொள்ளவில்லையே என்று கவலைப்படுகிறாள். இந்நிலையில் தோழி தலைவியிடம், 'நானும் தாயும் தந்தையும் உன்னை அத்தலைவனுக்கே மணம் செய்து கொடுக்க விரும்பியுள்ளோம். இந்த ஊரினரும் அம்பல் கூறுவதன் வாயிலாக உங்கள் இருவரையும் சேர்த்துச் சொல்கின்றார்கள்' என்று கூறுகிறாள்.

*... ... ... சேர்ப்பனை*
*யானும் காதலென்; யாயும் நனிவெய்யள்;*
*எந்தையும் கொடீஇயர் வேண்டும்;*
*அம்பல் ஊரும் அவனொடும் மொழிமே (குறுந்.51)*

என்னும் தோழியின் கூற்றில் 'யான் - யாய் - எந்தை' என்னும் வரிசைமுறை - நிரல் - இடம்பெற்றுள்ளது. இந்நிரல் வாயிலாகப் புலப்படும் கருத்தினை உ.வே.சா. தம் உரையில் நயம்பட எடுத்துக்காட்டியுள்ளார்.

*தலைவி அறத்தொடு நிற்பத் தோழியும், அவள் அறத்தொடு நிற்பச் செவிலியும் நற்றாயும், நற்றாய் வாயிலாகத் தந்தையும் தலைவி ஒரு தலைவன்பால் அன்பு பூண்டாள் என்பதை அறிவார்கள் ஆதலின் அம்முறையே தோழி, தன்னையும், தாயையும் பின் தந்தையையும் கூறினாள். பிறர் விரும்பினாலும் தலைவியைத் தலைவனுக்குக் கொடுக்கும் உரிமை தந்தைக்கே உண்டாதலின் 'எந்தையும் கொடீஇயர் வேண்டும்' என்றாள்.*[7]

மற்றொரு பாடல் - பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் சொல்வதாக அமைந்த பாடல் - உகாய்க்குடிகிழார் பாடியது.

*ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்எனச்*
*செய்வினை கைம்மிக எண்ணுதி (குறுந்.63)*

என்னும் பாடலடியில், ஈதல், துய்த்தல் எனும் சொற்களின் நிரல் நயத்தை அழகாக விளக்குகின்றார் உ.வே.சா.

*ஈந்துஎஞ்சிய வற்றையே துய்த்தல் இல்வாழ்வான் கடப்பாடாதலின் ஈதலை முன்னர்க் கூறினான்; 'விருந்தோம்பி, மிச்சில் மிசைவான்' (குறள்.85) என்பதை ஓர்க. ஈதலாகிய அறமும், துய்த்தலாகிய இன்பமும் பொருளால் ஆகுமாதலின் அம்முறை பற்றிக் கூறினானெனலுமாம்.*[8]

என்று ஈதலும், துய்த்தலும் நிரல்பட அமைந்தமைக்குக் கூறும் விளக்கம் இல்லறத்தானின் கடமைகளை நினைவூட்டும் நயமான விளக்கமாக அமைந்துள்ளது.

## பழமொழி கூறுதல்

உ.வே.சா. தம் உரை விளக்கத்தில் ஆங்காங்கே பொருத்தமான பழமொழிகளைச் சுட்டிச் சென்றுள்ளார். சில சான்றுகள் வருமாறு:

'யானை தீயைக் கண்டு அஞ்சுமாதலின் ஏனல் காக்கும் சேணோன் தினையையுண்ண வராதபடி ஞெகிழியை மூட்டினான். சேணோனது ஞெகிழிக்குப் பயந்த யானை, வீழும் விண்மீனைக் கண்டு அஞ்சுகிறது' என்பதைக் கபிலரின் குறுந்தொகைப் பாடல் ஒன்று எடுத்துரைக்கின்றது.

*ஏனலஞ் சிறுதினை காக்குஞ் சேணோன்*
*ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை*
*மீன்படு சுடரொளி வெரூஉம்* (குறுந். 357)

இப்பாடலின் விளக்கவுரையில்

> ஒருமுறை ஒரு பொருளால் அச்சமுற்ற ஒருவர் அப்பொருளைப் போன்ற வேறொன்றைக் கண்டாலும் அஞ்சுதல் இயல்பு என்பதை, 'கொள்ளிக் கட்டையால் அடிபட்ட பூனை மின்மினிப் பூச்சிக்குப் பயந்தது போல (ப.641)

என்னும் பழமொழி கூறி விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா.

உ.வே.சா. தம் உரையில் கையாண்டுள்ள வேறு சில பழமொழிகள் வருமாறு:

*முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டாற் போல* (ப.129)
*காமத்துக்குக் கண்ணில்லை* (ப.159)
*ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்* (ப.20)

## கருத்து நயம்

மழை பெய்யும் நடுயாமத்தில் தலைவன் தலைவியைச் சந்திக்க வருகின்றான்; 'இந்த இருளில் நீ எங்ஙனம் வழி தெரிந்து எம் ஊரைத் தேடி வந்தனை?' என்று தலைவனிடம் தோழி வருத்தமுற்று உரைப்பதாக அமைந்துள்ளது கபிலரின் பாடல் ஒன்று.

*பெயல்கண் மறைத்தலின் விசும்புகா ணலையே*
*நீர்பரந் தொழுகலின் நிலங்காண லையே*

*எல்லை சேறலின் இருள்பெரிது பட்டன்று*
*பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்*
*யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப*
*வேங்கை கமழுமெஞ் சிறுகுடி*
*யாங்கறிந் தனையோ நோகோ யானே* (குறுந். 355)

இப்பாடலுக்கு,

> *விசும்பு காணாமையின் விண்மீனொளியும் இலதாயிற்று. நிலம் காணாமையின் வழி காணற்கு அரிதாயிற்று. தானும் தலைவியும் துஞ்சாமையின், யாவரும் துஞ்சும் கங்குலென்னாது பல்லோர் துஞ்சும் கங்குலென்றாள். விசும்பு காணாமையின் திசையறிதலும், நீர் பரந்தொழுகலின் நிலமறிதலும், எல்லை சேறலின் நெறியறிதலும், ஊரின் ஒலியின்றித் துஞ்சுதலின் ஊரிடமறிதலும் அரியவாயின. 'வேங்கை கமழும் எம் சிறு குடி' என்றது, அவ்வேங்கை மலரின் மணத்தைக் கொண்டு எம் ஊரை அறிந்தனை போலும்!' என்ற கருத்தைக் குறித்து நின்றது.*[9]

என்று உ.வே.சா. தரும் விளக்கம், தலைவன் - தலைவியரது களவொழுக்கத்தில் நேரும் இன்னல்களை, படிப்பவர் மனதில் பதியும் வண்ணம் உணர்த்துகின்றது.

*யாரு மில்லைத் தானே கள்வன்*
*தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ*
*தினைத்தா ளன்ன சிறுபசுங் கால*
*ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்*
*குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே* (குறுந். 25)

என்பது, தலைவன் நெடுங்காலம் மணம் செய்து கொள்ளாமல் இருத்தல் பற்றி வருந்திய தலைவி, 'தலைவர் அருள் பூண்டு என்னை வரைந்து கொண்டால் அன்றி, எனக்கு உதவி செய்யத் தக்க சான்று பகர்வார் வேறு ஒருவரும் இலர்' என்று தோழிக்குக் கூறுவது போன்று அமைந்த ஒரு பாடல். இப்பாடலுக்கு உரைவிளக்கம் அளிக்குமிடத்து,

> *பிறர் அறியாவாறு வந்து தன் நலத்தைக் கவர்ந்து கொண்டு சென்றவனாதலின் கள்வன் என்றாள். 'அது' என்றது 'நின்னைப் பிரியேன்; பிரியின் ஆற்றேன்' என்றும் 'நின்னை விரைவில் மணந்து கொள்வேன்' என்றும் கூறிய சூளுறவை... என் நலத்தைப் பிறர்*

*அறியாவாறு / கவர்ந்த கள்வன் தன் வாய்மொழியின்படி செய்திலன்; 'நீ இங்ஙனம் கூறினையன்றே; அதனை நிறைவேற்றாதது என்?' என்று தொடுத்து வினாவுதற்கு ஏற்ற சான்றும் இல்லை; அங்கே இருந்தது கரி போதற்குத் தகாத நாரை ஒன்றே; அ∴தும் ஆரன் மீனை நோக்கிய கருத்தினதாதலின் அவன் சூளுறவைக் கேட்டிராது, இதற்கு என் செய்வேன்' என்பது தலைவியின் கருத்தாகக் கொள்க' .... 'ஆரல் பார்க்கும் நாரை உண்டு' என்றமையின் இக்களவுக் கூட்டம் நீர்த் துறைக்கண் நிகழ்ந்தது பெறப்படும்*[10]

என்றும் எழுதியுள்ளார் உ.வே.சா.

*இன்னும் இதனானே பன்மை சுட்டிய பெயர்ச்சொல், ஒருமையோடு இயைபின்றி இயைதலின் வழுவாயமைதூஉங் கொள்க. குருகென்பது இயற்பெயராதலின் அதன்கட் பன்மையோடு காலவென்பது இயைந்து காலனவாகிய குருகுகள் என நிற்பின், அ∴து உண்டென்னும் ஒருமைக்கு ஏலாமையின், குருகென்பது ஒருமையாயே நின்றதாதலின் வழுவேயாம்; கள்வன் தானொருவனுமே, வேறு சிலர் ஆண்டில்லை என்று கூறுகின்றாள். இரை தேரும் மனக் குறிப்புடைமையிற் கேளாது, சிறிது கேட்டதாயினும் கொலைசூழ் குருகாதலின் கூறுவதும் செய்யாது, இத்தன்மைத்தாய குருகும் உண்டென்று கூறுதலின் உண்டென்று ஒருமை வாசகத்தில் கூறினார்*[11]

என்று நச்சினார்க்கினியரின் சொல்லதிகார உரைக் குறிப்பையும் மேற்கோள் காட்டிச் செல்கின்றார் அவர்.

## எடுத்துக்காட்டு நயம்

*வேரல் வேலி வேர்கோட் பலவின்*
*சாரல் நாட செவ்வியை யாகுமதி*
*யார∴ தறிந்திசி னோரே சாரல்*
*சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே (குறுந். 18)*

என்பது இரவில் வந்து மீளும் தலைவனுக்குத் தோழி, 'தலைவியினது காமம் அவளால் தாங்கற்கு அரியதாதலின், விரைவில் வரைந்து

கொள்ள வேண்டும்' என்று வற்புறுத்துவதைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ள பாடல். 'நாட! செவ்வியை ஆகுமதி' என்று தோழி தலைவனை வாழ்த்துகிறாள்.

> *தலைமகனுக்கு உவப்பில்லாத வரைவைப் பற்றிக் கூறப்புகுகின்றாளாதலின் அதற்குப் பாதுகாப்பாக முதலில், 'நீ செவ்விய நலத்தை உடையை ஆகுக' என்று வாழ்த்தியதுமாம் தன்னினும் மிக்கார்க்கு இன்னாதனவற்றைக் கூறுவதற்குமுன் வாழ்த்துதல் மரபு. இதனை, கண்ணகி வழக்குரைக்க வந்துநின்ற நிலையை வாயில்காவலன் பாண்டியனுக்கு அறிவிப்பதற்கு முன் 'வாழியெம் கொற்கை வேந்தே வாழி' (சிலப்.20:30) என்பது முதலியவற்றால் வாழ்த்திப் பின் கூறும் பகுதியும், சச்சந்தனுக்குக் கட்டியங்காரனது வஞ்சகச் செயலைக் கூறப்புக்க வாயில் காவலன், 'நீணில மன்ன போற்றி, நெடுமுடிக் குருசில் போற்றி, பூணணி மார்ப போற்றி, புண்ணிய வேந்தே போற்றி' (சீவக.264) என்று கூறிய பகுதியும், அப்பகுதிக்கு 'வெய்ய சொல்லைக் கூறுதலை உடைய வாயிலோன், போற்றியென்று கூறி இறைஞ்சி... கூறினானென்க" (ந) என்றுள்ள உரையும் புலப்படுத்தும்.[12]*

என்று தாம் கூற வந்த கருத்துக்கு ஒப்புமையுடைய பிற இலக்கியக் கருத்துக்களை எடுத்துக்காட்டி விளக்கிச் செல்லும் பாங்கினை உ.வே.சா.விடம் காணலாம்.

## இலக்கண நயம் காட்டல்

'வேரல் வேலி' எனத் தொடங்கும் கபிலரின் பாடலுக்கு மற்றொரு சிறப்பு இருப்பதையும் சுட்டிக்காட்டுகிறார் உ.வே.சா.

> *ஆசிரியப்பா ஐந்தடியான் வந்தது (தொல்.செய்.158, பேர்); இதனுள் அடியெதுகையும் கூழை மோனையும் ஒரூஉ எதுகையும், இணை முரணும் கடையிணை எதுகையும் பின் முரணும் வந்தனவாயினும், முதல் வந்ததனாற் பெயர் கொடுத்து, அடி எதுகைச் செய்யுள் என்று வழங்கப்படும் 'வேரல் வேலி வேர்க்கோட் பலவின்' என்னும் பாட்டினுள், சிறு கோட்டுப் பெரும்பழம் என்னும் அடியினுள்*

> *இணைமுரணும் கடையிணை எதுகையும் வந்தனவாயினும், யாதானுமொன்றினாற் பெயர் கொடுத்து இணைமுரணென்றானும், கடையிணை எதுகையென்றானும் வழங்கப்படும்; ஏனையடி ஒருஉத் தொடையாகிய வரனடையில்லாமையால் அதனை மயக்கம் எனினும் இழுக்காது' (யா.வி.53); எல்லா அடியும் ஒத்த சிறப்புடை நேர்த் தளையான் வந்த நிலைமண்டில ஆசிரியப்பா*[13]

என்று இப்பாடலில் அமைந்துள்ள இலக்கண நயத்தை விளக்கிச் செல்கின்றார்.

'குருகும் உண்டு — உம்மை இழிவு சிறப்பு அஃது இருந்தும் சான்றாகும் தகுதி பெற்றதன்றென்னும் நினைவிற்று' (ப.60).

## பொருள் நயம்

> *முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்*
> *கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்*
> *குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்*
> *தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்*
> *இனிதெனக் கணவன் உண்டலின்*
> *நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே (குறுந். 167)*

என்னும் பாடல், தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்று வந்த செவிலி, 'தலைவி தலைவன் உவக்கும்படி அட்டு உண்பிக்கின்றாள்' என்று நற்றாய்க்குக் கூறுவதாக அமைந்துள்ளது.

சொல்லுக்குச் சொல் பொருள் கூறிச் செல்வது மட்டும் உரைத்திறன் அல்ல; அப்பாடலில் அமைந்துள்ள பொருள் நயங்களை, கருத்தாழங்களைச் சுட்டுவதும் சிறந்த உரையாசிரியர்க்குரிய கடமை ஆகும். அவ்வகையில் இப்பாடலுக்கு உ.வே.சா. தரும் உரைவிளக்கம் வருமாறு:

> *முளிதயிர் — நன்றாக முற்றிய தயிர்; முளிதல் - காய்தல்; நன்றாகக் காய்ந்த பாலால் உண்டாகிய தயிரென்று கொள்க; இதனை, 'பாறைபடு தயிர்' (சீவக. ப.26) என்பர்.*
>
> *இறுகிய தயிராதலின் தலைவி புளிக்குழம்பு செய்யும் பொருட்டுத் தன் மெல்விரலால் துழாவித் தாளிதம் செய்தாள். விரைவில் அமைக்கவேண்டுமென்னும்*

> *விருப்பினளாதலின் தயிர் பிசைந்த கையைத் துடைத்த ஆடையைத் துவைத்தலை மறந்தாள்; கையை ஆடையில் துடைத்தது செல்வ மிகுதியால் வந்த இயல்பு. 'ஏனது சுவைப்பினு நீகை தொட்டது, வானோ ரமுதம் புரையுமால் எமக்கென' (தொல். கற்பு-5) விரும்புபவனாதலின் இனிதென உண்டான். தலைவி கொண்ட அகமகிழ்ச்சியை முகம் காட்டியது. இயல்பாகவே பொலிவு பெற்ற நுதல் மகிழ்ச்சியாற் பின்னும் பொலிவுடையதாயிற்று. அம்மகிழ்ச்சியை மிகுதியாக வெளிப்படுத்தாமையின் நுண்ணிதின் மகிழ்ந்தன்றென்றாள். அங்ஙனம் வெளிப்படுத்தின் அது தருக்கின்பாற்படும். இதனால் தலைவி தற்கொண்டானைப் பேணுந்தகை சிறந்தா ளென்பதைச் செவிலி உணர்த்தினாளாயிற்று*[14]

என்று தலைவியின் கடமையையும், நுட்பமாகத் தன் அன்பைப் புலப்படுத்தும் திறனையும், பாடற் பொருள் விளக்கத்தில் நுட்பமாக எடுத்துக் காட்டியுள்ளார் உ.வே.சா. மேலும்

> *இப்பாட்டிற் கூறப்படும் உணவு வகையினால் நச்சினார்க்கினியர் 'பார்ப்பானையும் பார்ப்பனியையும் தலைவராகக் கூறியது' எனக் கொண்டனர் போலும்', 'பெரும்பாணாற்றுப்படையில் அந்தணர் மனையிற் பாணர் பெறும் உணவைப் பற்றிக் கூறியிருக்கும் பகுதி (304-10) இங்கே ஆராய்தற்குரியது*[15]

என ஒப்புமை காட்டிப் பொருள்நயம் புலப்பட விளக்கிச் செல்கின்றார்.

> *கருங்கண் தாக்கலை பெரும்பிறிது உற்றெனக்*
> *கைம்மை உய்யாக் காமர் மந்தி*
> *கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி*
> *ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்*
> *சாரல் நாட நடுநாள்*
> *வாரல் வாழியோ வருந்துதும் யாமோ (குறுந். 69)*

என்பது கடுந்தோட் கரவீரன் என்னும் புலவர் பாடிய பாடல். இதற்கு உரை வரையும்பொழுது,

> 'பறழ் மரமேறுதல் முதலியவற்றைக் கற்கவில்லை யென்னும் குறையையும் ஓராமல் மந்தி உயிர்நீத்தமை அதன் தலைக்கற்பை உணர்த்து

> கின்றது; தம் குட்டிகளுக்காக உயிர் வைத்து வாழும் பெண் விலங்கும் உண்டு... பாய்ந்த மாத்திரத்தில் உயிர் போதற்குரிய உயரத்தையுடைய தென்பாள் 'ஓங்குவரை யடுக்கம்' என்றாள்

என்று அடைமொழி நயமும் உணர்த்துகின்றார். மேலும்,

> 'கலை இறந்ததாக மந்தியும் உயிர் செகுக்கும் நாட என்றது, பெண் விலங்கினங்களும் தம் துணைக்குத் துன்பம் நேர்ந்த காலத்தில் உயிர் தரியாமையை நின் நாட்டில் அறிந்தனையாதலின், நினக்கு ஏதும் வருமேல் இவள் உயிர் வாழ்தலின்மையையும் அறிதியென்று உணர்த்தியவாறு' (பக்.143-144)

என்னும் குறிப்பு அமைய உரை எழுதிச் செல்லும் திறனை உ.வே.சா.விடம் காணலாம்.

## உவமை விளக்கம் தருதல்

'உவமம் என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல்' என்பது பேராசிரியர் தரும் விளக்கம் (தொல்.பொருள். ப.57). 'புலன் அல்லாதன புலனாதலும், அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்' உவமையின் பயன்கள் என்பர் இளம்பூரணர் (தொல்.பொருள்.ப.395).

தலைவன் பிரிந்து சென்ற பாலைநிலத்தை வருணிக்கும் பொழுது அள்ளூர் நன்முல்லையார் ஓர் அருமையான உவமையினைக் கையாளுகின்றார். ஒரு கிளி, தன் வளைந்த அலகினிடத்திலே வேப்பம்பழத்தைக் கொண்டுள்ளது. இக்காட்சி, ஒரு பொற்கொல்லன் தன் கூரிய சிவந்த கைந்நகத்தில் கொண்டிருக்கும் ஒரு பொற்காசினைப் போன்று விளங்குகிறதாம்:

> ... ... ... *கிள்ளை*
> *வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்*
> *புதுநாண் உழைப்பான் நுதிமாண் வள்ளுகிர்ப்*
> *பொலங்கல ஒருகாசு ஏய்க்கும்* *(குறுந்.67)*

> கிளியின் அலகுக்குக் கைவிரல் நகங்களும், வேப்பம்பழத்திற்கு உருண்டையான பொற்காசும் உவமைகள்

என்று விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா. (ப.140).

*பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்*
*ஊழ்ப்படு முதுகாய்* (குறுந். 68)

என்னும் பாடலில், "உழுந்தின் வேர் சிறிது மேலே தெரிந்த அடிக்குப் பூழ்க்கால் உவமை" (ப.141)யாகக் கூறப்படுவதை எடுத்துக்காட்டு கின்றார் உ.வே.சா.

*யாயும் ஞாயும் யாரா கியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்*
*யானும் நீயும் எவ்வழி யறிதும்*
*செம்புலப் பெயனீர் போல*
*அன்புடை நெஞ்சந் தாம்கலந் தனவே* (குறுந். 40)

என்பது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர், பிரிவரெனக் கருதி அஞ்சிய தலைமகள் குறிப்பு வேறுபாடு கண்டு தலைமகன் கூறியது என்னும் துறையில் அமைந்த பாடல்.

*செம்மண்ணிலத்துப் பெய்த நீரானது அம்மண்ணோடு கலந்து அதன் நிறத்தையும் சுவையையும் பெற்று ஒன்றுபடுவது போல நம் நெஞ்சம் ஒன்றோடொன்று கலந்து தன்மைகள் ஒன்றுபட்டனவென்று உவமையை விரித்துக் கொள்க. நெஞ்சு கலந்தமைக்குச் செம்புலப் பெயனீரை உவமை கூறிய சிறப்பால் இச்செய்யுளின் ஆசிரியர் 'செம்புலப் பெயனீரார்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார்.*[16]

என்று இப்பாடலில் அமைந்துள்ள உவமையை விளக்குவதோடு, இவ்வுவமையாலேயே இப்புலவர் இப்பெயர் பெற்றமையையும் எடுத்துரைக்கிறார் உ.வே.சா.

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது; மானிடராய்ப் பிறந்த காலையும் கூன், குருடு, பேடு நீங்கிப் பிறத்தல் அரிது' எனப் பாடுவார் ஒளவையார். மக்கள் பிறப்பின் வியத்தகு பிறவி வகைகள் பலவற்றைச் சங்கப் புலவர்கள் ஏற்புழி இயம்பிச் சென்றனர். கவைமகன் என்னும் விசித்திரப் பிறவியைக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது. தாயின் கருவில் இரு பகுதியாகப் பிரிந்து உருவும் அதன் நிழலும் போல் ஒன்றுபட்டு உருவாகிப் பிறக்கும் ஒட்டிய இரட்டைப் பிள்ளையைத் தான் கவைமகன் என்பர். மாந்தர் இனத்தில் பத்து இலட்சத்திற்கு ஒருமுறை தான் இத்தகு பிறவி தோன்றும் என்பர். இப்பிறவியை உடல்நூலார் 'Siamese twins' என்று அழைப்பர் என்பர் சோ.ந.கந்தசாமி (தமிழிலக்கியச் செல்வம், தொகுதி 1, ப.69).

இத்தகைய அரிய பிறவியை ஓர் இனிய உவமையாகக் குறுந்தொகைப் புலவர் எடுத்தாண்டுள்ளார்.

தலைவியைக் காண வேண்டும் என்பதற்காக, கொல்லும் தன்மை வாய்ந்த முதலைகள் இயங்கும் கானல்வழியை நீந்திக் கடந்து வருகிறான் தலைவன்; அவன் வரும் வழியில் உள்ள துன்பங்களை நினைத்து அஞ்சி வருந்துகிறாள் தலைவி. இது தலைவியின் உள்ளத்தின் உயர்வு. தலைவனை வராதே எனத் தடுத்தலும் இயலாது; அவனுக்குத் துன்பம் விளையுமோ எனத் தலைவி வருந்துவதால் இரவுக்குறி நேர்வதும் தக்கதன்று! இரண்டு பேருக்கும் இடையில் நின்றுவருந்தும் தோழியின் நிலைக்கு - அவள் படும் அவதிக்கு - ‘கவைமக நஞ்சுண்டாங்கு’ என்னும் உவமையைப் பயன்படுத்துகிறார் புலவர்:

*கொடுங்கான் முதலைக் கோள்வல் ஏற்றை*
*வழிவழக்கு அறுக்கும் கானலம் பெருந்துறை*
*இனமீன் இருங்கழி நீந்தி நீநின்*
*நயனுடை மையின் வருதி; இவள்தன்*
*மடனுடை மையின் உயங்கும்; யான்அது*
*கவைமக நஞ்சுண் டாஅங்கு*
*அஞ்சுவல் பெருமஎன் நெஞ்சத் தானே (குறுந். 324)*

நீ நின் அன்பினால் வருதலின் நீ வருதலைத் தடுத்தலும் தக்கதன்று; நினக்கு ஏதும் வருமோவென இவள் உயங்குதலின் இரவுக்குறி நேர்தலும் தக்கதன்று. நும்மிருவருக்கும் துன்பமுண்டாகும் இந்நிலையில் இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால் இருவர் திறத்திலும் இரங்கும் தாயைப் போல, யான் இருவர் திறத்தும் இரக்கமுடையேன் என்றாள்.

இவ்வுமையினால், இரண்டு மகவினுக்கும் ஒருங்கே நஞ்சு தீர்க்கும் மருந்து தருதலே தக்கதாதல் போல், இருவருக்கும் நன்மை தரும் வரைவே ஏற்புடைத்தென்ற வரைவுகடாதற் பொருளும் பெறப்படும்.

*கவைமகவின் செய்தியை உவமையாக எடுத்தாண்ட சிறப்பால் இப்பாட்டை இயற்றிய புலவர் கவை மகனென்னும் பெயர் பெற்றார்.*[17]

என்று இப்பாடலுக்கு உ.வே.சா. உரைவிளக்கம் தருவது அவரது நுண்மாண் நுழைபுலத்தை எடுத்துக்காட்டுகிறது.

நெருஞ்சி மலர் காண்பதற்கு அழகுடையதாய் இன்பம் நல்கும். ஆனால், தொடும்போது அதன் முள் வருத்தும். இங்ஙனம் காணும்போது இன்பமும், தீண்டும்போது வருத்தமும் தரும் நெருஞ்சி மலரைப் போல, களவுக் காலத்தில் கண்ணுக்கும் நெஞ்சுக்கும் இனியவனாக இருந்த தலைவன், பின்னால் கற்புக் காலத்தில் தலைவியைப் பிரிந்து, பரத்தையை நாடிச் சென்று தலைவிக்கு இன்னாதவனாகின்றான். களவுக் காலத்தில், தலைவி பசிய வேப்பங்காயைக் கொடுத்தால் கூட, 'அருமையான வெல்லக் கட்டி' என்று சொல்லிப் பாராட்டி உண்ட தலைவன், கற்புக் காலத்தில் அவள் பாரி மன்னனுடைய பறம்பு மலையினின்று தைமாதத்துக் குளிர்ந்த சுனைநீரைக் கொண்டுவந்து தந்தாலும்', 'வெய்ய, உவர்க்கும்' என்று பழித்துரைக்கிறான்.

*வேம்பின் பைங்காய்என் தோழி தரினே*
*தேம்பூங் கட்டி என்றனிர் இனியே*
*பாரி பறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்*
*தைஇத் திங்கள் தண்ணிய தரினும்*
*வெய்ய உவர்க்கும் என்றனிர்*
*ஐய அற்றால் அன்பின் பாலே* (குறுந். 196)

என்று மிளைக்கந்தன் என்னும் புலவர் இதனை எடுத்துரைக்கின்றார். இப்பாடலின் உரையில்

*ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது, வானோர் அமுதம் புரையுமால் எமக்குஎன' (தொல்.கற்பு,5) மகிழ்பவனாதலின் வேம்பினை வெல்லக்கட்டி யென்றான்...... தண்மையும் உண்ணுதற்கினிமையு முடைய் சுனைநீரை வெய்யவென்றும் உவர்க்கும் என்றும் கூறியமை அவனது அன்பின் திரிபைப் புலப்படுத்தியது*[18]

என்று விளக்கம் அளித்துச் செல்கின்றார் உ.வே.சா. இங்ஙனம் தலைவியின் முரண்பட்ட–இன்னாத–பண்பு நலனுக்கு இனியதோர் உவமையை எடுத்துக் காட்டுகிறார் அள்ளூர் நன்முல்லையார்:

*நோமென் நெஞ்சே நோமென் னெஞ்சே*
*புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்*
*கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு*
*இனிய செய்தநங் காதலர்*
*இன்னா செய்தல் நோம்என் நெஞ்சே* (குறுந். 202)

கட்கின் புதுமலரென்பதனோடு முரண் நயம்பட ஊற்றிற்கு இன்னாத முள்ளென்பதை

இசையெச்சத்தால் வருவிக்க. இன்னா செய்தலாவது பரத்தையர் மாட்டு அன்புடையனாகி யொழுகுதல

(ப.381) என்று இப்பாடலில் வெளிப்படும் தலைவனின் முரண்பாட்டினை விளக்கி உரைவரைந்துள்ளார் உ.வே.சா.

'உவமையின் நயம், சங்க நூல்களைப் போலப் பிற்கால நூல்களில் காணல் இயலாது' (நூலாராய்ச்சி) என்னும் உ.வே. சாமிநாதையரின் கூற்றுக்கு ஏற்பக் குறுந்தொகையில் நயமான உவமைகள் மலிந்து காணப்படுகின்றன.

நூற்பாக்களை எடுத்துக்காட்டி விளக்குதல், இலக்கணக் குறிப்புகள் தந்து விளக்குதல், உரையாசிரியர்களின் உரைக்குறிப்புகளைத் தந்து விளக்குதல் ஆகிய முறைகள் உ.வே.சா.விடம் காணப்படுகின்றன.

1. 'நாணில மன்ற எங்கண்ணே' (குறுந்.35) என்னும் பாடல் வரிக்கு உரை விளக்கம் தருமிடத்து, "வண்ணம் பசந்து புலம்புறு காலை, உணர்ந்த போல வுறுப்பினைக் கிழவி, புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே" (தொல். பொருளியல், 8) என்பது இலக்கலணமாதலின், கண்களை நாணில்லாதன போலக் கூறினாள் (ப.82) என்று விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா.
2. 'உயவு நோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே' (குறுந். 28) என்னும் பாடல் அடியில் ஊர்க்கு – ஊரை; உருபு மயக்கம் எனச் சுட்டுவர் உ.வே.சா.
3. 'யாயும் ஞாயும் யாரா கியரோ' என்னும் பாடலில்இடம்பெறும் யாய், ஞாய், எந்தை, நுந்தை என்றும் முறைப் பெயர்களை, உரையாசிரியர்களின் உரைக்குறிப்புகளை எடுத்துக்காட்டி விளக்கிச் செல்வதைக் காணலாம்.

*யாய் - என் தாய்; இச்சொல் தன்மையோடு தொடர்புடையதென்பது, 'யாயென்பது தன்மையோடு ஒட்டுதலின் முறைப்பெயரெனினும் உயர்திணையாம்' (தொல்.பெயர், 26) என நச்சினார்க்கினியரும், 'யாயென்பதோவெனின் தன்மையோட்டுத் தமையின் முறைப்பெயரேனும் உயர்திணை யெனப்படும்' எனக் கல்லாடரும் எழுதிய உரைப்பகுதிகளால் தெளிவாகும்.*

*யாய், ஞாய், தாய் என்னும் மூன்றும் முறையே என்தாய், நின்தாய், அவர்தாயென மூவிடத்தோடும் ஒட்டி வருவன; 'இம் மூன்றிடத்தும் ஒட்டப்பட்ட பெயர்கள் ஆறாம் வேற்றுமை முறையைக் குறித்து*

> *மேற்சொல்லியவாற்றான் தந்தை, நுந்தை, எந்தை எனவும்; தாய், ஞாய், யாய் எனவும்; தம்முன், நும்முன், எம்முன் எனவும்; தம்பி, நும்பி, எம்பி எனவும் முதல்வனையும், ஈன்றாளையும், முன்பிறந்தானையும், பின் பிறந்தானையும் உணர்த்தும் பன்மைச்சொற்கள்' (தொல்.எச்.214) என்று தெய்வச்சிலையார் எழுதியுள்ள அரிய உரைப்பகுதியால் இது புலப்படும்*[19]

என்று இலக்கணக் குறிப்புகள் தந்து விளக்கிச் செல்கின்றார் உ.வே.சா.

> *பறழென்பது குரங்கின் இளமைப் பெயர் (தொல்.மரபு. 14, பேர்)*
>
> *ஆண் குரங்கினைக் கடுவன் என்றல் தொன்றுதொட்ட வழக்கு (தொல்.மரபு. 68 பேர்).*

இங்ஙனம் பல்வேறு உரை மரபுகளும் நுண்ணிய நயங்களும் விளங்கக் குறுந்தொகைக்கு உரை வரைந்து இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர்களின் வரிசையில் இன்றியமையாத ஓர் இடத்தைப் பெற்றுள்ளார் உ.வே.சா.

## குறிப்புகள்

1. வ.சுப. மாணிக்கம், சிந்தனைக் களங்கள், பக்.313-314.
2. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.324.
3. உ.வே. சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், ப.253.
4. மேலது, ப.80.
5. மேலது, ப.86.
6. மேலது, ப.145.
7. மேலது, ப.111.
8. மேலது, ப.133.
9. மேலது, ப.637.
10. மேலது, பக்.59-60.
11. தொல்.எச்ச.65. நச்சினார்க்கினியர் உரை.
12. உ.வே. சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், பக்.44-45.
13. மேலது, பக்.45-46.
14. மேலது, ப.319.
15. மேலது, ப.320.
16. மேலது, ப.92.
17. மேலது, ப.590.
18. மேலது, ப.371.
19. மேலது, ப.91.

# 4. 'தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்'

இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர்களுள் சங்க இலக்கியம், காப்பிய இலக்கியம், சிற்றிலக்கியம், இலக்கணம் என்றாற் போல் பல வகைகளுக்கும் உரைகள் எழுதித் தடம் பதித்தவர் - 'தமிழ் நூல்களைப் பதிப்பதற்கெனப் பிறந்தவர்' என்றும், 'ஏடு காத்த ஏந்தல்' என்றும், 'தலைப்பா கட்டிய தமிழ்ப்பா' என்றும் தமிழ் கூறு நல்லுலகால் சிறப்பிக்கப் பெற்றவர் - உ.வே.சாமிநாதையர்.

*பேச்செல்லாம் தமிழ்மொழியின் பெருமை பேசிப்*
*பெற்றதெல்லாம் தமிழ்த்தாயின் பெற்றி யென்று*
*மூச்செல்லாம் தமிழ்வளர்க்கும் மூச்சே வாங்கி*
*முற்றும்அவள் திருப்பணிக்கே மூச்சை விட்டான்'*

என்பது நாமக்கல் கவிஞர், உ.வே.சா.வுக்குச் சூட்டும் புகழாரம். மேலும் அவர், 'மனமாரத் தமிழ்நாட்டார் வணங்கத் தக்கோன்' என்றும், 'சொல்லிய துன்பங்கள் பலவும் தாங்கிச் சோர்வறியாது உழைத்த ஒரு சாமிநாதன்' என்றும் 'நோன்பிழைத்த தமிழ்த் தவசி சாமிநாதன்' என்றும் உ.வே.சா.வை நெஞ்சாரப் போற்றிப் பாடுவர்.

உ.வே.சா.வின் உரை நூல்களுள் பல்லாற்றானும் நனிசிறந்து விளங்குவது குறுந்தொகைக்கு அவர் வரைந்த உரை ஆகும். இவ்வுரை அவரது வாழ்நாளில் இறுதிக் கட்டத்தில் - 82-ஆம் வயதில் - எழுதப்பெற்றது என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. கூற்று, கூற்று விளக்கம், மூலம், பிரதிபேதம், பழைய கருத்து, ஆசிரியர் பெயர்கள், பதவுரை, முடிபு, கருத்து, விசேட உரை, மேற்கோளாட்சி, ஒப்புமைப் பகுதி என்னும் பன்னிரு கூறுகளைத் தன்னகத்தே கொண்டதாய் உ.வே.சா.வின் குறுந்தொகை உரை விளங்குகின்றது. 'இப் பதிப்பில் நான் மேற்கொண்ட சில முறைகளை இங்கே தெரிவிக்க விரும்புகிறேன்' என்று உ.வே.சா.வே தம் 'முகவுரை'யில் இவற்றைக் குறித்துள்ளார்.

குறுந்தொகைக்கு முதன்முதலில் உரை எழுதிய பெருமைக்கு உரியவர் திருக்கண்ணபுரம் சௌரிப் பெருமாள் அரங்கன் ஆவார்; அவரது உரை 1915-ஆம் ஆண்டில் வெளிவந்தது. சோ.அருணாசல தேசிகர் 1933-ஆம் ஆண்டில் குறுந்தொகை மூலத்தை மட்டும்

பதிப்பித்து வெளியிட்டார். உ.வே.சா. தம் குறுந்தொகைப் பதிப்பிற்கு எழுதிய முகவுரையில் இவ்விருவரையும் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்; இருவரது பதிப்புகளைப் பற்றியும் பதிவு செய்துள்ளார். இது உரையாசிரியர் என்ற முறையில் உ.வே.சா.வின் ஆளுமையில் காணப்பெறும் நேர்மைத் திறத்தினை உணர்த்துவதாகும். சௌரிப் பெருமாள் அரங்கனின் குறுந்தொகைப் பதிப்பு வெளிவந்து 22 ஆண்டு களுக்குப் பிறகு உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பு வெளிவந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

> உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பில்
>
> *'பேரொளி'யாய்த் (Highlight) திகழ்வது 'நூலாராய்ச்சி' ஆகும். 88 பக்க அளவில் அமைந்த அப்பகுதி உ.வே.சா.வின் ஆய்வு மனப்பான்மையைப் பறைசாற்றுவதாகும். இன்றைய முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்குப் பல்லாற்றானும் வழிகாட்டும் தகுதியும் திறனும் படைத்தது அப்பகுதி. "இவரது பெரும்புலமையும் ஆராய்ச்சியும் உருவெடுத்து வந்தவைதான் இவருடைய பதிப்புக்களாகும்*[2]

என்னும் பேராசிரியர் எஸ்.வையாபுரிப் பிள்ளையின் மதிப்பீடு இவ்வகையில் நினைவுகூரத்தக்கதாகும்.

இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் முதலான முன்னைய உரையாசிரியர்களின் உரைகளில் ஆழங்காற்பட்டவர் உ.வே.சா. எனவே அவர்களின் தாக்கம் உ.வே.சா.வின் உரை முறையிலும் ஆங்காங்கே படிந்து கிடப்பதைக் காணமுடிகின்றது; சொற்பொருள் விளக்கம் தருதல், பாட பேதம் சுட்டுதல், நாகரிகம், பண்பாடு தொடர்பான செய்திகளைப் பதிவு செய்தல் முதலான உரை நெறிகளைப் பின்பற்றுவதில் உ.வே.சா. தமக்கு முன்னைய உரையாசிரியர்களுக்குப் பெரிதும் கடன்பட்டுள்ளார். அதே வேளையில், தம் தனித்திறன் விளங்கவும் உ.வே.சா. குறுந்தொகைக்கு உரை வரைந்துள்ளார்.

> ஒரு புலவன் காலக் கழிவு நோக்காது நெடிதாராய்ந்து தன் வாணாளில் ஒரு நூற்கு உண்மையுரை எழுதி முடிப்பினும் போதியதே

(உரைநடைக் கோவை: இரண்டாம் பகுதி, இலக்கியக் கட்டுரைகள், ப.29) என்பார் பண்டிதமணி மு.கதிரேசனார். இம் மந்திர மொழிக்கு ஏற்ப உ.வே.சா. தம் வாழ்நாளின் முதிர்ந்த பருவத்தில்

குறுந்தொகைக்கு 'உண்மை உரை'யினை வரைந்துள்ளார்; 'தமிழ் அன்னையின் திருவடித் துணைகளில் என்றென்றும் கிடந்து ஒளிரும் ஒரு பொன்மலராக'த் தம் குறுந்தொகைப் பதிப்பினை வெளியிட்டுள்ளார்; சொல் நயம், தொடர் நயம், அடைமொழி நயம், பொருள் நயம், நிரல் நயம், இலக்கண நயம் என்றாற் போல் பல்வகை நயங்களும் பாங்குற விளங்கக் குறுந்தொகைக்கு உரை எழுதியுள்ளார்.

உ.வே.சா.வின் சிந்தாமணிப் பதிப்பு வெளிவந்த ஆண்டு 1888; குறுந்தொகைப் பதிப்பு வெளிவந்த ஆண்டு 1937. இரண்டு பதிப்புகளுக்கும் இடைப்பட்ட ஏறத்தாழ ஐம்பது ஆண்டுக் கால இடைவெளியில் வெளிவந்த உ.வே.சா.வின் பதிப்புக்களை ஆராய்வோர் அவரது பதிப்பு முறையின் பரிணாம வளர்ச்சியை உய்த்துணர்தல் கூடும்.

உ.வே.சா.வின் பதிப்பு முறை தனித்தன்மை வாய்ந்தது; ஒரு நல்ல பதிப்பு எந்தெந்த உறுப்புக்களைப் பெற்று விளங்குதல் வேண்டுமோ அத்துணை உறுப்பு நலங்களையும் ஒருசேரப் பெற்று அமைந்தது அவரது பதிப்பு. இக் கருத்து உ.வே.சா.வின் குறுந்தொகைப் பதிப்பிற்கு நூற்றுக்கு நூறு பொருந்தி வருவதாகும்.

> *பதிப்பு முறையில் இதரருக்குப் பெரும் வழிகட்டியாக அவர் (உ.வே.சா.) விளங்கி யிருக்கிறார்... பதிப்பு முறைகளை மேல் நாடுகளுக்குப் போய்த்தான் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற மாயத்தை அவர் ஒழித்தார். அவர் வழியில் தமிழ் ஆராய்ச்சி செல்ல வேண்டும்.*[3]

என்னும் தெ.பொ.மீனாட்சிசுந்தரனாரின் மதிப்பீடு இவ்வகையில் நினைவுகூரத் தக்கதாகும்.

*பார்காத்தார் ஆயிரம்பேர்; பசித்தார்க் காகப்*
*பயிர்காத்தார் ஆயிரம்பேர்; பாலர்க் காக*
*மார்காத்தார் ஆயிரம்பேர் வாழ்ந்த நாட்டில்*
*மனங்காத்த தமிழ்த்தாய் 'என் உடைமை யெல்லாம்*
*யார்காத்தார்' எனக்கேட்க, ஒருவன் அம்மா*
*யான்காப்பேன் எனவெழுந்தான் சாமி நாதன்*
*நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்*
*நிலைகாத்த மலையிமய நெற்றி மேலான்*

என்பது மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்களுக்கு மூதறிஞர் செம்மல் வ.சுப.மாணிக்கம் தம் 'தமிழ்க் காதல்' என்னும் ஆய்வு நூலின் முகப்பில் படைத்திருக்கும் 'அன்புறை'.

இது உண்மை; புகழ்ச்சி இல்லை. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுவது போல்,

> *தமிழிலக்கியச் சரித்திரத்தின் காலப் பகுப்பில், ஐயரவர்கள் தொண்டு புரிந்து வந்த சுமார் 50 ஆண்டுகளையும் 'சாமிநாதையர் காலம்' என்று தான் பிற்காலத்தில் வரும் தமிழ்ச் சரித ஆசிரியர்கள் கூறுவார்கள்.*[4]

## குறிப்புகள்

1. நாமக்கல் கவிஞர் பாடல்கள், ப.238.
2. தமிழ்ச்சுடர் மணிகள் : ஆறாம் தொகுதி, ப.198.
3. முல்லை முத்தையா, [தொகுப்பு] டாக்டர் உ.வே.சாமிநாதய்யர், ப.46.
4. தமிழ்ச் சுடர் மணிகள்: ஆறாம் தொகுதி, ப.175.

# பயன்பட்ட நூல்களும் கட்டுரைகளும்

1. உலகநாதன், தணிகை (தொகுப்.) நாமக்கல் கவிஞர் பாடல்கள். சென்னை: தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, 1960.
2. கந்தசாமி, சோ.ந. தமிழிலக்கியச் செல்வம் - தொகுதி 1. சிதம்பரம் : மெய்யப்பன் பதிப்பகம், 2003.
3. கலியாணசுந்தரனார், திரு.வி. திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள். சென்னை: கழக வெளியீடு, மறுபதிப்பு 1964.
4. கல்கி 'அய்யர்வாள் ஞாபகார்த்தம்', யார் இந்த மனிதர்கள்? சென்னை : வானதி பதிப்பகம், 1998.
5. காசிராசன், எஸ்.டி. உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு, சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1987.
6. சண்முகவடிவேல், இ.ரெ. 'உ.வே.சா.வின் தமிழ் ஆவேசம்', தமிழ் வளர்த்த சான்றோர்கள், சென்னை: கலைஞன் பதிப்பகம், 2009.
7. சரவணன், திருவேங்கிமலை, 'தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாத ஐயர்', தலை நிமிர்ந்த தமிழர்கள் - பாகம் 2. சென்னை: குமுதம் பு(து)த்தகம் வெளியீடு, 2006.
8. சாமிநாதையர், உ.வே. குறுந்தொகை மூலமும் உரையும். சென்னை : உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், ஐந்தாம் பதிப்பு, 2000.
9. சாமிநாதையர், உ.வே. என் சரித்திரம். சென்னை: உ.வே.சா. நூல் நிலையம், ஆறாம் பதிப்பு, 2004.
10. தமிழண்ணல். தொல்காப்பியத் தோற்றம். மதுரை : மீனாட்சி புத்தக நிலையம், 2008.
11. பாரதியார் கவிதைகள். சிதம்பரம்: தென்றல் நிலையம், 2001.
12. பெரியபெருமாள், குன்றக்குடி. 'தமிழ்த் தாத்தா பேராசான் உ.வே.சா.', தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள். சென்னை: காமதேனு பப்ளிகேஷன்ஸ் லிட்., 1996.
13. மாணிக்கம், வ.சுப. தமிழ்க் காதல். சிதம்பரம்: மெய்யப்பன் பதிப்பகம், 2002.

14. முல்லை முத்தையா. டாக்டர் உ.வே.சாமிநாதய்யர். சென்னை: மணிவாசகர் நூலகம், இரண்டாம் பதிப்பு 1980.

15. மோகன், இரா. இலக்கிய வித்தகர்கள். சிதம்பரம் : மெய்யப்பன் பதிப்பகம், 2006.

16. மோகன், இரா. & சொக்கலிங்கம் நெல்லை ந. உரை மரபுகள். சிதம்பரம் : மெய்யப்பன் பதிப்பகம், 2003.

17. ராம்மோகன், அழகப்பா, 'சாமிநாதையர், உ.வே.', நினைக்கப்பட வேண்டியவர்கள். அமெரிக்கா : உலகத் தமிழ் மொழி அறக்கட்டளை, 2002.

18. வாலி. 'தமிழ்த் தாத்தா', இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள். சென்னை : வானதி பதிப்பகம், 2004.

19. வெங்கடேசன், சு. உ.வே.சா. சமயம் கடந்த தமிழ். சென்னை: பாரதி புத்தகாலயம், 2006.

20. வையாபுரிப்பிள்ளை, எஸ். 'மகாமகோபாத்யாய டாக்டர் சாமிநாதையர்', தமிழ்ச் சுடர் மணிகள் (ஆறாம் தொகுதி). சென்னை : வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம், 1995.

21. மதுமலர். காலாண்டு இதழ்-7 (ஜூலை-செப்.2006).

# பின்னிணைப்புகள்

## பின்னிணைப்பு 1

## குறுந்தொகைப் பதிப்புகளும் உரைகளும்


1. இராகவையங்கார், ரா., குறுந்தொகை விளக்கம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம், 1993.
2. இராசாராம், துரை, குறுந்தொகை தெளிவுரை, திருமகள் நிலையம், சென்னை, 2005.
3. இராமரத்தினம், குறுந்தொகை மூலமும் உரையும், கங்கை புத்தக நிலையம், சென்னை, 2002.
4. கோவிந்தசாமி, மு., குறுந்தொகை நயவுரை, வாசுகி பதிப்பகம், சிதம்பரம், 2000.
5. சரவணமுத்து, இரா., குறுந்தொகை நறுமணம் மூலமும் உரை வீச்சும், சாரதா பதிப்பகம், சென்னை, 2000.
6. சண்முகம் பிள்ளை, மு., குறுந்தொகை மூலமும் உரையும் (ஆய்வுப் பாட நுண்பதிப்பு) தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.
7. சாமிநாதையர், உ.வே., குறுந்தொகை மூலமும் உரையும், மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 2000.
8. சிதம்பரனார், சாமி., குறுந்தொகைப் பெருஞ்செல்வம், இலக்கிய நிலையம், சென்னை, 1983.
9. சுஜாதா, 401 காதல் கவிதைகள் (குறுந்தொகை ஓர் எளிய அறிமுகம்), உயிர்மை பதிப்பகம், சென்னை, 2006.
10. சோமசுந்தரனார், பொ.வே., குறுந்தொகை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1955.
11. சௌரிப்பெருமாள் அரங்கன், குறுந்தொகை மூலமும் உரையும், சென்னை, முல்லை நிலையம், 2000.
12. தமிழண்ணல், குறுந்தொகை மக்கள் பதிப்பு, கோவிலூர் மடாலயம், 2002.
13. நாகராசன், வி., குறுந்தொகை, நியூ செஞ்சரி புக் ஹவுஸ், சென்னை, 1981.
14. பிரோமா, இரா., குறுந்தொகை தெளிவுரை, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2005.

15. புலியூர்க்கேசிகன், குறுந்தொகை தெளிவுரை, பாரி நிலையம், சென்னை, 1965.

16. மணிமேகலைப் பிரசுரம் (ஆசிரியர் குழு), குறுந்தொகை தெளிவுரை, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 1986.

## பின்னிணைப்பு 2

## 'முகவுரை'யிலும் 'நூலாராய்ச்சி'யிலும் உ.வே.சா. காட்டும் குறுந்தொகை மாண்பு

1. புலவர் பெயர்களைக் கொண்டு ஆராய்ந்தால் எட்டுத் தொகையில் முதலில் தொகுக்கப்பட்ட நூல் குறுந்தொகை என்பது தெரிய வரும்.

2. இந்நூலுள் இப்பொழுது தெரிந்த வரையில் 165 செய்யுட்களே பிற நூல் உரைகளில் மேற்கோளாகக் காட்டப் பெறாதவை.

3. சங்க காலத்துப் புலவர் பெருமக்களின் கவியாற்றலை அறிந்து கொள்வதற்கு இக்குறுந்தொகையும் ஒரு கருவியாகும். இதன்கண் அகநானூற்றைப் போல முதல் கருப்பொருள்களைப் பற்றிய செய்திகள் விரிவாகக் காணப் படவில்லை. திருக்குறளைப் போல அறவே நீக்கப்படவு மில்லை. இலக்கண அமைதி நன்குடையதாகி விரிவும் சுருக்கமும் இன்றி இயற்கைக் காட்சிகளின் எழில் நலங்களையும் அகனைந்திணை ஒழுக்கங்களையும், பண்டைக்கால நாகரிகச் சிறப்பையும் வேறு பல அரிய பொருள் களையும் விளக்கிக் கொண்டு நிற்பது இக்குறுந்தொகை.

4. முதற்பொருளின் வகையாகிய பொழுது பெரும்பொழுது சிறுபொழுதென இரு கூறுபடும். பெரும்பொழுதாவன கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. ஒவ்வொரு பருவத்தில் இன்ன இன்ன மலர்கள் மலரும். இன்ன இன்ன விலங்குகள் இன்ன இன்ன நிலையை அடையும் என்பன போன்ற பல செய்திகள் உள்ளன. அவை புலவர்களுடைய நுண்ணறிவை வெளிப்படுத்தும்.

5. ஆலமரத்தின் அடியில் சபை கூடுதல் பண்டை வழக்கம். அவ்வவையைத் தொன்மூ தாலத்துப் பொதியில் என்று ஒரு புலவர் குறிக்கின்றார்.

6. யானையைப் பற்றிய செய்திகள் பல இந்நூலுள் வந்துள்ளன குறிஞ்சி நிலத்தில் வலியோடு உலவும் யானையையும் பாலை நிலத்தில் உரனழிந்து வெம்மையால் துன்புறும் யானையையும் பற்றிய நிகழ்ச்சிகளைப் புலவர்கள் புனைந்து உரைத்திருக் கின்றார்கள்.

7. தலைவிக்கும் தலைவனுக்கும் இடையே உள்ள அன்பைப் பற்றிய செய்திகள் மிக உயர்ந்த நிலையை உடையன. இவ்வன்பு காமம் கேண்மை, தொடர்பு நட்பு நயம் என்னும் பெயர்களால் வழங்கும்.

8. ‘இடிக்குங் கேளிர்’, ‘சிறாரேமுறு நண்பன்’, ‘புலவர் தோழன்’ எனப் பாங்கன் பாராட்டப்படுகின்றான். தலைமை நிலையுடைய தலைவனும் இடித்துரைக்கும் பாங்கனை உடையான் என்னும் செய்தி நட்பின் உயர்வைச் சான்றோர் அறிந்திருந்த முறையைப் புலப்படுத்தும்.

9. பரத்தையில் பிரிவு உலகியலையே கருதி அமைந்தது போலும். தலைவியின் ஊடலுக்குக் காரணம் வேண்டும் என்பதற்காக இப்பரத்தையிற் பிரிவு அமைந்ததென்பது அத்தனை சிறந்த காரணமாகத் தோற்றவில்லை. கோயில் சிற்பங்களில் சில வகையான காட்சிகள் அமைந்திருத்தலைப் போல இக்கவிஞர்களுடைய சொற்சிற்பங்களில் இஃது அமைந்துள்ளது என்றே தோன்றுகின்றது. முன்னதற்கு ஏதேனும் தக்க காரணம் இருக்குமெனில் இதற்கும் அக்காரணம் பொருந்தும்.

10, எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவாதலின் பலவகைக் குறைபாடுகள் பொருந்திய பரத்தையிற் பிரிவிலும் கற்பு நெறியின் சிறந்த தன்மை புலவர்களால் புலப்படுத்தப் பட்டிருத்தல் அறிந்து மகிழ்தற்கு உரியதாகும்.

11. இந்நூலுள் பின்வரும் ஒன்பதின்மருடைய கூற்றுக்கள் வந்துள்ளன: (1) இற்பரத்தை 1, (2) கண்டோர் 3, (3) காதற் பரத்தை 2, (4) செவிலித் தாய் 9, (5) தலைவன் 62, (6) தலைவி 180, (7) தோழி 140, (8) பரத்தை 2, (9) பாங்கன் 2, நற்றாயின் கூற்று ஒன்றேனும் காணப்பட வில்லை. தலைவி கூற்றே பிறவற்றினும் மிகுதியாக உள்ளது. அதற்கடுத்தபடி தோழி கூற்றின் தொகையும் அதனை அடுத்துத் தலைவனது கூற்றும் அமைந்துள்ளன.

12. பரத்தையரின் இற்பரத்தை, காதற் பரத்தை, சேரிப் பரத்தை என்னும் மூவகையார் சொல்லப்படுகின்றார்.

13. தன்னலம் சிறிதுமின்றித் தலைவன் தலைவியர் இருவரது நலத்தை மட்டும் கருதிப் பலவகை இடுக்கண்களுக் கிடையும் சதுர்படச் செயல் புரிந்து வாழும் தோழியினது வரலாறு மிக்க வியப்பைத் தருவது.

14. வருபவர்களுக்கு வரையறை இன்றி உணவிடுதல் குடிமக்களுடைய இயல்பு. இராக்காலத்தில், புறத்தே யாரேனும் உள்ளீரோ? என்று வினாவி யாவரையும் அழைத்து உண்பிப்பர்.

15. பொருளை அறத்தின் பொருட்டுத் தேடுதலே பண்டைப் பெரியோர் கருத்து. தம் முன்னோர்கள் ஈட்டி வைத்த செல்வத்தைச் செலவழித்தல் பிழை என்ற கொள்கையும், அந்தச் செல்வத்தை உடையவனைச் செல்வனாகக் கொள்ளல் கூடாதென்ற கொள்கையும்,

*உள்ளது சிதைப்போ ருளரெனப் படாஅர்*

என்ற அடியால் விளங்குகின்றன.

16. இந்நூலில் சொல்லப்படும் மகளிர் அழகாலும் குணத்தாலும் சிறந்திருந்தனர். நீர் போன்ற சாயலும், மயில் போன்ற இயலும், நறுமை தண்மை மென்மையாகிய இயல்பு வாய்ந்த மேனியும், இயற்கை மணமும் மாமைக் கவினும் உடையவர்களாக விளங்கினர்.

17. கருப்ப முதிர்ந்த மகளிர் புளிச் சுவையை மிகுதியாக விரும்புகின்றனர். பன்னிரண்டு மாதம் கருப்ப முதிர்தலை ஒரு புலவர் சொல்லுகின்றார்.

18. பொதுவாக நாட்டு மக்களிடத்தே காணப்படும் சில வழக்கங்களை இந்நூலால் அறிய இயலும். அவற்றில் சில இக்காலத்தில் காணப்படாதன. சில காணப்படுவன.

19. துயரத்தினால் உண்டாகும் கண்ணீர் வெம்மை உடையதாகும் என்பதும், உத்தம ஆடவர் மேனி முல்லையின் நறுமணத்தை உடையதாக இருக்கும் என்பதும் அரிய செய்திகள்.

20. ஒரு மலை மாலைப் பொழுதில் இருளில் மறைவதற்கு உவமையாகக் கப்பல் கடலில் ஆழ்வதை ஒரு புலவர்

கூறுதலின் கப்பல் பெரியதாக இருக்க வேண்டும் என்று தெரிய வருகின்றது.

21. மெல்லென இனிமை பெறக் கேட்பார் விரும்பும் வண்ணம் பேசும் உரைகளை,

*மெல்லிய லினிய மேவரு தகுந*

என ஒரு புலவர் குறிக்கின்றார். இவற்றால் வஞ்சகம் இல்லாத நெஞ்சத்தோடு எண்ணி ஆராய்ந்து அழகிய சொற்களால் இனிமையும் நன்மையும் உண்டாகும் வண்ணம் உண்மையும் பயனும் உடைய சொற்களைப் பிறர் விரும்பிக் கேட்கும் முறையில் பேசும் மொழிகளே சிறந்தவை என்று பழம்புலவர்கள் எண்ணிய எண்ணம் புலப்படுகின்றதன்றோ?

22. தமிழர் இசையைப் போற்றி வளர்த்து வந்தனர். இசையைப் பற்றியும், இசைக் கருவிகளைப் பற்றியும் சில செய்திகள் இந்நூலில் உள்ளன.

23. அறம், பொருள், இன்பம், வீடு பற்றிய நீதிகள் அங்கங்கே அமைந்து விளங்குகின்றன.

24. வினை, பயன், மெய், உரு என்னும் நால்வகையான உவமைகளும் பல இடங்களில் உள்ளன. உவமையின் நயம், சங்க நூல்களில் போலப் பிற்கால நூல்களில் காணல் இயலாது.

25. புலவர்களுள் சிறப்புப் பெயர்களால் பெயர் பெற்ற பதின்மூவர் தாம் கூறிய உவமை நயத்தால் பெயர் பெற்றவர்களாதல் காண்க. இதனால் புலமை ஆற்றல் உவமையால் வெளிப்படும் என்னும் பண்டையோர் கொள்கை தெளிவுறும்.

26. உறுப்புக்குறை, சாதி, தொழில் முதலியவற்றோடு சார்த்திப் புலவர்களில் சிலர் பெயர்கள் வழங்குவதை உற்றுநோக்கும் போது அவற்றாலும் பிற வகையினாலும் அவர்களுடைய கல்விப் பெருமை குறையவில்லை என்பதும் அவர்களைக் குறிக்கும் அடையாளமாகவே அத்தகைய முறை கொள்ளப்பட்டது என்பதும் புலனாகின்றன. எல்லாவற்றிலும் புலமையே தலைமை பெற்று விளங்கியது என்ற கருத்து உறுதி ஆகின்றது.

## பின்னிணைப்பு 3

## உ.வே.சா. பத்து

1. குடந்தைநகர்க் கலைஞர் கோவே!
பொதியமலைப் பிறந்த மொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவர் வாயில்
துதியறிவாய் அவர் நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்கு வாயே!

– கவியரசர் பாரதியார்,
பாரதி பாடல்கள் ஆய்வுப் பதிப்பு, ப. 24.

2. சாமிநாத ஐயர் தமிழிலே பிறந்தார். தமிழிலே வளர்ந்தார். தமிழிலே வாழ்ந்தார் அவர். பிறப்புத் தமிழ், வளர்ப்புத் தமிழ், வாழ்வுந் தமிழ், அவர் மனமொழி மெய்களெல்லாம் தமிழே ஆயின. அவர் தமிழாயினர். தமிழ் அவராயிற்று. அவர் தமிழ். தமிழ் அவர்.

– தமிழ்த் தென்றல் திரு.வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள் (பகுதி – 1) ப. 160.

3. தமிழ் நூற்பதிப்புக்களில் நாம் நம்பிக்கையாகக் கொள்ளக் கூடிய பதிப்புகள் இவருடைய (உ.வே.சா. வுடைய) பதிப்புக்களே. இவர் ஒன்று எழுதி வைத்தால், அது பெரும்பாலும் தவறாக மாட்டாது. எனவே எப்பொழுதும் நம்மால் கொள்ளத்தக்கது. இவருடைய ஆழ்ந்த கல்வியும், தெளிந்த தமிழ் அறிவும், பரந்த உலகியலுணர்ச்சியும் இவற்றைத் தமிழ் மக்களுக்கு நூல் வாயிலாகப் பயன்படுத்தும் சீரிய முறையும் நம்மால் என்றென்றும் போற்றத்தக்கன.

– பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை,
தமிழ்ச் சுடர்மணிகள் (ஆறாம் தொகுதி), ப. 184.

4. பார்காத்தார் ஆயிரம்பேர், பசித்தார்க் காகப்
பயிர்காத்தார் ஆயிரம்பேர், பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம்பேர் வாழ்ந்த நாட்டில்
மனங்காத்த தமிழ்த்தாய் "என் உடைமை யெல்லாம்

யார்காத்தார்'' எனக் கேட்க, ஒருவன் "அம்மா
யான்காப்பேன்'' எனவெழுந்தான் சாமிநாதன்
நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்
நிலைகாத்து மலையிமய நெற்றி மேலான்

— மூதறிஞர் வ.சுப. மாணிக்கம், மகாமகோபாத்தியாய
டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்களுக்கு
'என் அன்புறை', தமிழ்க்காதல்.

5. அவர்க்கொரு (உ.வே.சா.வுக்கு) பெருமிதமிக்க மதிப்பீடு 'ஏடு காத்த ஏந்தல்' என்பது ஏன்? "கொலம்பசு புத்துலகம் காணவில்லை எனினும் பிறரொருவர் கண்டிருப்பர். ஆனால் உ.வே.சா. பழந்தமிழ் ஏடுகளைக் கண்டிராவிடின் நாம் கண்டடையவும் கூடுமோ? விறகு தலையன் போல அவர் ஏடு சுமந்த பேற்றுக்குத் தமிழுலகம் கடப்பாடுடையது'' என்பது பாவாணர் பாராட்டு!

— மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர்
(மேற்கோள் புலவர் இரா. இளங்குமரன்)
தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாதையர்,
நினைக்கப்பட வேண்டியவர்கள், ப. 194.

6. பாரதியார் தோற்றுவித்த மறுமலர்ச்சி யுகத்திற்கு ஆழ்ந்தகன்றோர் அடிப்படை அமைத்தவர் சாமிநாதையர் என்பது என் தேர்ந்த கொள்கை. தமிழ்த் தாத்தாவும் புரட்சிக் கவிஞரும் ஒருங்கே தமிழிலக்கிய உலகில் சத்திய சோதனைகள் செய்தவர் ஆவர்.

— பி.ஸ்ரீ.
நான் அறிந்த தமிழ் மணிகள், பக். 26–27.

7. நற்றமிழ் நூல்கள் எங்கேங்கே இருப்பினும், நாளும் பொழுதும் அவற்றை நாடி ஓடிச் சென்று, செந்தமிழ் இன்பம் என்னும் தேனைத் திரட்டி வந்து, பழந்தமிழ் நூல்கள் என்னும் தேன் குடங்களாக, அறிவுச் செல்வங்களாக, பிற்காலத் தமிழ் மக்களுக்கு வழங்கி வைத்துச் சென்றுள்ள அந்தத் தமிழ் மகனின் நினைவு தமிழ் உள்ள வரை, தமிழ் மக்களின் நெஞ்சங்களில் நின்று நிலைத்திருக்கும். நெஞ்சார்ந்து போற்றப்பெறும்.

— குன்றக்குடி பெரியபெருமாள்,
தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள், ப. 135.

8. கும்பமுனி எனத் தோன்றும்
குடந்தைநகர் சாமிநாதா?
என. . .
பாரதி
பாடிப் பரவிய
தமிழ்த் தாத்தா. . .
ஒருநாள்
வானம் போனான் –
வீடு தேடி அல்ல; தமிழ் –
ஏடு தேடி!

– கவிஞர் வாலி,
இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள், ப. 35.

9. தமிழ் என்ற மூன்றெழுத்து உள்ள வரை உ.வே.சா. என்ற மூன்றெழுத்தும் உயிரோடு உலா வரும். உ.வே.சா.வைப் பற்றி ராஜாஜி உரக்க இப்படி அறிவித்தார் – 'வேதங்களை உருவாக்கிய வியாசரும் இவரும் சமம்! இவர் தமிழ் தந்த வியாசர்' என்றார்.

– கவிஞர் வாலி,
இவர்கள் இன்னமும் இருக்கின்றார்கள், ப. 35.

10. அவர் (உ.வே.சா.) பதிப்பிக்கும் நூல்கள் பல்வேறு சிறப்புக்களைக் கொண்டிருக்கும். முன்னுரை படித்தாலே நூல் பற்றிய நுணுக்கமான செய்திகளை அறியலாம். ஒவ்வொரு பதிப்பிலும் அவருடைய முயற்சி அவருடைய நுண்ணறிவு அவருடைய தெளிவு பிறர்க்கு எளிமையாக விளங்க வைக்கும் திறன் முதலியன தெற்றென விளங்கும்.

– இ.ரெ. சண்முகவடிவேல்,
உ.வே.சா.வின் தமிழ் ஆவேசம்,
தமிழ் வளர்த்த சான்றோர்கள், பக். 299–300.

## பின்னிணைப்பு 4

## உ.வே.சா.வுக்குக் கல்கி சூட்டிய பட்டம்

மகாமகோபாத்தியாய, டாக்டர் உ.வே.சாமிநாத ஐயருக்குத் 'தமிழ்த் தாத்தா' என்ற சிறப்புப் பட்டத்தை – மரியாதை அடை மொழியைச் சூட்டியவர் கல்கி. உ.வே.சா.வின் எண்பதாண்டு நிறையை ஒட்டி, 1935ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் 'ஆனந்த விகடன்' இதழில் வெளியிட்ட சிறப்பு மலரில் கல்கி 'விகடன்' என ஒப்பம் இட்ட மூன்று கடிதங்களை ஒரு கோவைத் தலையங்கமாய் எழுதினார். அவற்றுள் உ.வே.சா.வுக்குத் 'தமிழ்த் தாத்தா' பட்டம் சூட்டிக் கல்கி எழுதிய சிறப்பான கடிதம் இதோ.

"தமிழ்த் தாத்தா ஸ்ரீ உ.வே.சாமிநாதய்யர் அவர்கள் சமூகத்துக்குப் பேரன் பரிவுடன் எழுதிக்கொள்வது.

பெரியவர்கள் என்ன யோசிக்கிறீர்கள்? இது என்ன புதிய பட்டமாக இருக்கிறது. இவன் யார் கொடுப்பது என்றா? அப்படி யெல்லாம் தாங்கள் நிராகரிக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன். சகலமும் அறிந்த பெரியாராகிய தாங்கள் நான் அளித்திருக்கும் பட்டத்தின் பொருத்தத்தை அங்கீகரிக்காமல் இருக்க முடியாது. முதலாவது ஔவையாருக்கு எப்படி 'தமிழ்ப் பாட்டி' என்னும் பட்டம் பொருந்துமோ அதுபோலவே, தங்களுடைய பிராயத் தினாலும், தமிழுக்குத் தாங்கள் செய்திருக்கும் தொண்டினாலும் 'தமிழ்த் தாத்தா' என்னும் பட்டம் தங்களுக்குப் பொருந்தும்.

இரண்டாவதாக, மேற்படி பட்டத்திலுள்ள இரண்டு 'த்'களையும் நீக்கிவிட்டால், தாங்கள் 'தமிழ் தாதா' ஆகிறீர்கள். நமது நாட்டின் பரம்பரை வழக்கத்தை அனுசரித்து அகப்பட்ட நூல்களை யெல்லாம் ஒளித்து வைக்காமல் அச்சிட்டு வெளியாக்கிப் பதினாயிரக்கணக்கானவர்களுக்குப் பயன்படும்படி செய்த தங்களைத் 'தமிழ் தாதா' என்று சொல்லாமல் வேறு யாரைச் சொல்வது?

மூன்றாவது 'உருசி கண்ட பூனை உறியை உறியைத் தாவும்' என்பதுபோல் தமிழன்பர்கள் இன்னமும் தங்களை நோக்கித் 'தமிழ் தா! தா!' என்று கேட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

ஆகவே இவ்வளவு பொருத்தமான பட்டத்தைத் தாங்கள் அங்கீகரித்தே தீரவேண்டும். அப்படி அங்கீகரிக்காவிட்டாலும் நான் என்னமோ அந்தப் பட்டத்தால்தான் தங்களை அழைப்பேன்.

ஏனென்றால், 'மகாமகோபாத்தியாய', 'தாக்ஷிணாத்ய கலாநிதி' முதலியவை வாயில் நுழைவதே கடினமாயிருக்க, 'தமிழ்த் தாத்தா' என்பதோ தங்களுடைய தமிழ் வசன நடையைப் போல் எளிதாயிருக்கிறது.

—இரா. மோகன், கல்கி நூறு, பக். 48–49.

## பின்னிணைப்பு 5

## உ.வே.சா. குறுந்தொகைப் பதிப்பின் கூறுகள்

1. பதிப்பாளர் குறிப்பு
2. மூன்றாம் பதிப்பின் முகவுரை
3. முதற்பதிப்பின் முகவுரை
4. நூலாராய்ச்சி

முன்னுரை

**ஐவகை நிலச் செய்திகள்**

**பொழுதுகள்** (பெரும்பொழுது: கார் – கூதிர் – முன்பனி – பின்பனி – வேனில் சிறுபொழுது – மாலை – யாமம் – வைகறை – காற்று)

**மரம் செடி கொடி** (அகில் – அசோகு – அடும்பு – அத்தி மரம் – அரலைச் செடி – அவரை – அறுகு – ஆம்பற்கொடி – ஆலமரம் – ஆவிரை – இருப்பை – இற்றி – ஈங்கை – உகாய் – உழுந்து – எருக்கு – எள்– ஐயவி – ஐவனம் – ஒமை மரம் – கரும்பு – கருவிளை– கவலைக் கிழங்கு – கள்ளி – காஞ்சி – காந்தள் – காயா மரம் – குரவம் – குருந்த மரம் – குவளை – குளவு – குறிஞ்சி – குன்றி – கூதளி – கொறுக்காந்தட்டை – கொன்றை – கோங்கு – சந்தன மரம் – சிலை – சேம்பு – ஞாழல் – ஞெமை – தடா – தாமரை – தாழை – தாளி – தினை – நரந்தம் – நெய்தல் – நெருஞ்சி – நெல் – நெல்லி – நொச்சி – பகன்றை – பஞ்சாய் – பயறு – பருத்தி – பலாமரம் – பலாசு – பவழம் – பனை – பாதிரி – பிடா – பித்திகம்– பிரம்பு – பீர்க்கு – புன்கு – புன்னை – மரல் – மராம் – மருதமரம் – மாணைக் கொடி – மாமரம் – மிளகுக் கொடி–

முல்லை – முள் முருங்கை – முள்ளிச் செடி – மூங்கில்– யாமரம் – வரகு – வழை – வள்ளி – வாகை – வாழை– வெட்சி – வேங்கை மரம் – வேம்பு)

**விலங்குகள்** (அணில் – ஆமான் – ஆமை – எருமை – எலி – எறும்பு – ஓந்தி – கடமா – குதிரை – குரங்கு – செந்நாய் – தவளை – நண்டு – நாய் – நீர்நாய் – பசுவும் ஆனேறும் – பல்லி – பாம்பு – புலி – மரையினம்– மான் – மீன் – முதலை – யானை – வருடை – வரையா– வெருகு)

**பறவைகள்** (அன்றில் – அன்னம் – எழால் – கணந்துள் – காக்கை – கிளி – குயில் – குருவி – குறும்பூழ் – கூகை – கொக்கு – கோழி – நாரை – நுளம்பு – பருந்து – புறா – மகன்றில் – மயில் – யானையங்குருகு – வங்கா – வண்டு – வெளவால்)

**அன்பு :** அன்பு வாழ்க்கை (இயற்கைப் புணர்ச்சி – இடந்தலைப்பாடு – பாங்கற் கூட்டம் – பாங்கியற் கூட்டம்– மடலேற்றம் – பகற்குறி – பகற்குறியிடையீடு – வரைவு கடாவுதல் – வரைபொருட் பிரிவு – அறத்தொடு நிற்றல்– வரைவு – உடன்போக்கு – இல்லறம் – பொருட் பிரிவு – பிரிவில் தலைவியின் நிலை – தலைவன் நிலை – மீளுதல்– பரத்தையற் பிரிவு – கூற்று வகை – பரத்தையர்– செவிலி –தோழி)

**உபகாரிகள்** (அகுதை – அஞ்சி – அதிகன் – அருமன்– அழிசி – ஆய் – எல்லி – எழிலி – ஓரி – கட்டி – குட்டுவன் – கொங்கர் – கோசர் – சேர்ந்தன் – தொண்டையர் – நள்ளி – நன்னன் – பசும்பூட் பாண்டியன்– பாரி – பூழியர் – பொறையன் – மலையன்– வடுகர் – விச்சிக்கோ – வேளிர்)

**இடங்கள்** (மலைகள்: அரலைக் குன்றம் – இமயம் – ஏழில் – கொல்லி – பரம்பு – பொதியில்.

ஆறுகள்: காவிரி – சோணை காடு.

ஊர்கள் : ஆற்காடு – உறையூர் – குறும்பூர் – குன்றூர்– தொண்டி – பாடலி – மரந்தை – முள்ளூர் – வாகைப் பறந்தலை)

**பண்டைக் காலத்து மக்கள் வாழ்க்கை நிலை** (அரசியல்— ஊரமைப்பு — அறம் — பொருள் — சாதிகள் — ஆடவர்— மகளிர் — நிமித்தங்கள் — வழக்கங்கள் — கருவிகள் — ஊர்திகள் — உணவு வகை — உரை இசை— கடவுள் — நீதிகள்).

**இலக்கணச் செய்திகள்** (நால்வகைச் சொற்கள் — வடசொற்கள் — உவமை)

**புலவர்கள்** (சிறப்புப் பெயர்கள் — புலவர்களுடைய ஊர்கள்— சாதி — தொழில் — பெண்பாற் புலவர் — உறுப்பால் வந்த பெயர் — அடைமொழிகள் — சில வழக்காறுகள் — தெய்வப் பெயர்கள் — பிற பெயர்கள்).

5. பாடினோர் வரலாறு
6. குறுந்தொகை மூலமும் உரையும்
7. செய்யுள் முதற்குறிப்பகராதி
8. அரும்பத முதலியவற்றின் அகராதி
9. இப்பதிப்பில் எடுத்தாண்ட நூல்கள்
10. நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற் குறிப்பகராதி.

## பின்னிணைப்பு 6

## உ.வே.சா. மேற்கொண்ட பதிப்பு முறைகள்

*“இப்பதிப்பில் நான் மேற்கொண்ட சில முறைகளை இங்கே தெரிவிக்க விரும்புகிறேன்”*

1. **கூற்று :** ஒவ்வொரு செய்யுளும் இன்னாருடைய கூற்று என்பதைத் தலைப்பில் அமைத்திருக்கின்றேன். திணைப் பெயரைத் தலைப்பிடுதல் அகநானூற்றிற் கண்டதாயினும் பொருளில் கருத்துச் செல்வதற்கு இம்முறை தக்கதென்று தோன்றியது. அன்றியும், தொல்காப்பியத்தில் கூற்று வகையாகச் சூத்திரங்கள் வகுக்கப்பட்டிருத்தலும் இங்ஙனம் அமைக்கும் கருத்தை உண்டாக்கியது. சில செய்யுட்களில் இரண்டு பழைய கருத்துக்கள் இருக்கின்றன. அவற்றில் முதற்கருத்தினபடியே கூற்று அமைக்கப்பட்டது.

2. **கூற்று விளக்கம் :** இது பழைய கருத்தையும் செய்யுட் பொருளையும் இணைத்துச் சுருக்கமாக வரையப்பட்டது.

இரண்டு கருத்துள்ள இடங்களில் முதற் கருத்துக்கே இவ்விளக்கம் எழுதப்பட்டது.

3. **மூலம் ஏட்டுச்சுவடிகளை ஆராய்ந்து** பொருட் சிறப்புடைய பாடங்களையே கொடுத்திருக்கிறேன்.

4. **பிரதிபேதம்:** ஏட்டுச் சுவடிகளாலும் உரையாசிரியர்கள் உரைகளில் காட்டிய மேற்கோள் பகுதிகளாலும் தெரிந்த பாடங் களுள் முக்கியமானவை அடிக்குறிப்பில் காட்டப்பெற்றன. ஏனையவை த்னியே தொகுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவற்றில் பல மிகவும் பிழை உள்ளனவாக இருப்பினும் பழைய நூல்களில் நம் நாட்டவர்களுக்கு இடைக்காலத்தே இருந்த புறக்கணிப்பை நன்கு வெளிப்படுத்தும் பொருள் வரையறை செய்யாமல் உள்ளதை உள்ளபடியே பிரதி செய்து வந்தவர்கள் ஓர் எழுத்தை மற்றோர் எழுத்தாகக் கொண்டு எழுதிவிட்டதனாலும் தெரியாத இடங்களில் தாமே ஊகித்துப் புதியனவாக எழுதிச் சேர்ந்துவிட்டமையாலும் உண்டான மாறுபாடுகள் அளவில. பழம் பிரதிகளில் ஈகார ஏகாரங் களின் பின்னர் யகரவொற்று எழுதப்பட்டிருந்தது. ஆய்த எழுத்தை எழுத வேண்டிய இடத்தில் குகரம் எழுதப்பட்டிருந்தது. சில இடங்களில் இவ்விரண்டுமே தந்நகர றன்னகரங்கள், லகர வகரங்கள், ரசர றகரங்கள் என்பவை ஒன்றுக்கொன்று மாறாக எழுதப்பட்டிருக்கும். கு, ரு, கு என்பனவும், அ, கு, க என்ற மூன்றும் தமக்குள் வேற்றுமை தெரியாதபடி இருந்தன. ற்ற என வரும் இடங்களில் த்த என்ற பாடம் காணப்பட்டது. ஒரிடத்தில் காசினை என்பதில் கா என்னும் எழுத்து தூ என மாறி அதன்பின் ஒரு சகர ஒற்றுத் தோன்றித் தூச்சினை என்று எழுதப்பட்டிருந்தது. இங்ஙனம் பல பிரதிகளிலும் காணப்பட்ட பாடங்களையும் அவற்றின் மாறுபாட்டின் வரலாற்றையும் விரிக்கின் மிகப் பெருகும்.

5. **ஆசிரியர் பெயர்கள்:** சுவடிகளில் இருந்தவாறே இப்பெயர்கள் அமைக்கப்பட்டிருந்தன.

6. **பழைய கருத்து:** கருத்தில் பொருத்தம் இல்லாத சொற்கள் நகவளைவுக்குள் அமைக்கப்பட்டன. இதிலுள்ள சில கடினமான சொற்களுக்குப் பொருள் இருத்தலைப் பகரத்துள் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில செய்யுட்களுக்கு இரண்டு கருத்துகள் இருக்கின்றன.

7. **பதவுரை:** அந்வயப்படுத்திப் பொருள் விளக்குதற்குரிய சொற்களைப் பெய்து பதவுரை எழுதப்பட்டுள்ளது. பல இடங்களில் விளி முன்னத்தால் வருவித்தெழுதப்பட்டது. சில செய்யுட்களுக்கு ஒருவாறு உரை எழுதினும் முடிபு முதலியன தெளிவாக இன்மையின் என் மனத்திற்குத் திருப்தி உண்டாகவில்லை.

8. **முடிபு:** வினை முடிபு இத்தலைப்பிற் காட்டப்பட்டது.

9. **கருத்து:** செய்யுளின் கருத்துச் சுருக்கமாக எழுதப்பட்டது.

10. **விசேட உரை:** பதசாரங்களும் இலக்கணச் செய்திகளும், பொருள் விளக்கங்களும் வரலாறுகளும் இப்பகுதியில் எழுதப் பட்டுள்ளன. உள்ளுறையுவமம், இறைச்சி எனும் இரண்டும் குறிப்பெனவே குறிக்கப்பட்டுள்ளன.

11. **மேற்கோளாட்சி:** இலக்கண இலக்கியங்களின் உரைகளில் உரையாசிரியர்கள் இந்நூற் செய்யுட்களையும் செய்யுட் பகுதிகளையும் காட்டிய இடங்கள் அகரவரிசைப்படி வகுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவை தெரிந்த வரையில் உரையாசிரியர்களின் காலமுறையில் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. சில இடங்களில் உரையாசிரியர்களுடைய கருத்துகள் அடிக்குறிப்பில் விளக்கப்பட்டன.

12. **ஒப்புமைப்பகுதி:** செய்யுட்களின் சொற்பொருளோடு ஒப்புமையை உடைய பிறநூற் செய்யுட்களும் செய்யுட் பகுதிகளும் ஒப்புமைப் பகுதியென்னும் தலைப்பில் காட்டப் பட்டன. இதில் பெரும்பாலும் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சிந்தாமணி என்னும் நூல்களின் பகுதிகளே காணப்படும். கருத்தை நன்கு விளக்குவனவாகிய பிற்காலத்து நூற்பகுதிகள் சிறுபான்மையாகவே இருக்கும். இவ்வொப்புமைப் பகுதி சங்க நூற்பொருள்களை ஆராய்வாருக்குப் பெரிதும் பயன்படும் பாடங்களை நிச்சயம் செய்வதற்கு இவ்வொப்புமைப் பகுதிகள் சிலவிடங்களில் உதவின. இதில் காட்டப்பட்ட செய்யுட்பகுதி குறுந்தொகைச் செய்யுளை இயற்றிய புலவரால் பாடப்பெற்றதாக இருப்பின் அங்கே உடுக்குறியிட்டுக் கீழ்க்குறிப்பில் இன்னார் பாட்டென்று காட்டப்பட்டுள்ளது.

நூலின் மூலமும் உரையும் அடங்கிய பகுதிகள் மேலே கண்ட முறையில் வகைப்படுத்திப் பதிப்பிக்கப்பட்டன. நூலிற்கு அதிகமாகச் செய்யுள் முதற்குறிப்பகராதியும் அரும்பதவுரை முதலியவற்றின் அகராதியும் நூலின் பின்னே சேர்க்கப்பட்டன.

இம்முகவுரையின் பின்னே நூலாராய்ச்சியும் ஆசிரியர் பெயர் அகராதியும் பாடபேதங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. நூலாராய்ச்சியில் இந்நூலால் அறிந்த பலவகைச் செய்தி களையும் பண்டைக் காலத்துத் தமிழ் மரபுகளையும் வேறு பலவற்றையும் காணலாம். இந்நூல் செய்யுட்களைப் பாடிய புலவர்களின் சரித்திரத்தைப் புறநானூறு முதலிய பதிப்புக்களில் எழுதிய பிறகு நான் செய்து வந்த ஆராய்ச்சியினால் தெரிந்த செய்திகள் பல. அவற்றையும் அமைத்துப் புலவர் சரித்திரங்களைத் தனியே வெளியிட எண்ணியிருத்தலின் இந்நூலில் ஆசிரியர் வரலாறுகளை எழுதாமல், அவர்கள் பெயர்களையும் அவர்கள் இயற்றிய செய்யுள் எண்களையும் மாத்திரம் காட்டியிருக்கிறேன்.

முதலில் நான் கருதியபடி இல்லாமல் பல புதிய விஷயங்களைச் சேர்க்க நேர்ந்தமையின் எதிர்பார்த்ததைவிட அதிக காலம் இப்பதிப்புக்கு ஆயிற்று.

## பின்னிணைப்பு 7

## உ.வே.சா. எடுத்தாண்ட நூல்கள்

1. அகநானூறு
2. அகப்பொருள் விளக்கம்
3. அஞ்ஞவதைப் பரணி
4. அம்பிகாபதி கோவை
5. அறநெறிச்சாரம்
6. அறப்பளீசுர சதகம்
7. அற்புதத் திருவந்தாதி
8. ஆதியுலா
9. இலக்கணக் கொத்து
10. இலக்கண விளக்கம்
11. இறையனாரகப் பொருள்
12. இன்னா நாற்பது
13. இனியவை நாற்பது
14. ஈங்கோய்மலை எழுபது
15. உத்தரகாண்டம் (இராமா.)
16. ஐங்குறுநூறு
17. ஐந்திணையெழுபது
18. ஐந்திணையைம்பது
19. கடம்பவன புராணம்
20. கந்தரனுபூதி
21. கம்பராமாயணம்
22. கல்லாடம்
23. கலித்தொகை
24. களவழி நாற்பது
25. களவியற் காரிகை
26. கார் நாற்பது
27. காளத்திநாதர் கட்டளைக் கலிப்பா
28. கிளவித் தெளிவு
29. கிளவி மாலை
30. குணநாற்பது
31. குறிஞ்சிப்பாட்டு
32. கூர்ம புராணம்
33. கைந்நிலை
34. கைலைபாதி காளத்தி பாதியந்தாதி
35. கோயில் நான்மணிமாலை
36. சித்திரமடல்
37. சிதம்பரச் செய்யுட்கோவை
38. சிலப்பதிகாரம்
39. சிலாசாஸனங்கள்
40. சிற்றட்டகம்
41. சிறிய திருமடல்
42. சிறுபஞ்சமூலம்
43. சிறுபாணாற்றுப்படை
44. சீகாளத்திப் புராணம்
45. சீவகசிந்தாமணி
46. சூடாமணி நிகண்டு
47. சூளாமணி
48. சொக்கநாதருலா
49. ஞானாமிருதம்
50. தக்கயாகப்பரணி
51. தகடூர் யாத்திரை
52. தஞ்சைவாணன் கோவை
53. தண்டியலங்காரம்
54. தணிகைப்புராணம்
55. தமிழ் நாவலர் சரிதை
56. தமிழ்நெறி விளக்கம்
57. தமிழ் விடுதூது
58. திணைமாலை நூற்றைம்பது
59. திணைமொழியைம்பது
60. திரிகடுகம்
61. திருக்குற்றாலக் குறவஞ்சி
62. திருக்குறள்
63. திருச்சிற்றம்பலக்கோவையார்
64. திருச்செந்தூர்த்தலபுராணம்

65. திருநெடுந்தாண்டகம்
66. திருப்பல்லாண்டு (திவ்.)
67. திருப்பாவை (திவ்.)
68. திருமயிலையமக அந்தாதி
69. திருமுருகாற்றுப்படை
70. திருவரங்கக் கலம்பகம்
71. திருவலஞ்சுழி மும்மணிக் கோவை
72. திருவள்ளுவமாலை
73. திருவாசகம்
74. திருவாய்மொழி
75. திருவாரூர் நான்மணிமாலை
76. திருவாரூர் மும்மணிக் கோவை
77. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
78. திருவிசைப்பா
79. திருவிருத்தம்
80. திருவெங்கைக்கோவை
81. திருவெங்கையுலா
82. திருவேகம்பமாலை
83. திருவேகம்பர் திருவந்தாதி
84. திவாகரம்
85. தேவாரம்
86. தொல்காப்பியம்
87. தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி
88. நம்பியகப் பொருள்
89. நளவெண்பா
90. நற்றிணை
91. நன்னூல்
92. நன்னெறி
93. நாச்சியார் திருமொழி
94. நாலடியார்
95. நான்மணிக்கடிகை
96. நீதிநெறி விளக்கம்
97. நீலகேசி
98. நெடுநல்வாடை
99. நேமிநாதம்
100. பட்டினப்பாலை
101. பதிற்றுப்பத்து
102. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல்
103. பரிபாடல்
104. பழமொழி
105. பாசவதைப்பரணி
106. பாண்டிக்கோவை
107. பிரபுலிங்கலீலை
108. புறநானூறு
109. புறப்பொருள் வெண்பாமாலை
110. பெரிய திருமடல்
111. பெரிய திருமொழி
112. பெரியபுராணம்
113. பெரியாழ்வார் திருமொழி
114. பெருங்கதை
115. பெரும்பாணாற்றுப்படை
116. பெருமாள் திருமொழி
117. பொருநராற்றுப்படை
118. மணிமேகலை
119. மதுரைக்காஞ்சி
120. மலைபடுகடாம்
121. மாறன் அலங்காரம்
122. மீனாட்சியம்மைகுறம்
123. முத்தொள்ளாயிரம்
124. முதற்றிருவந்தாதி
125. முல்லைப்பாட்டு
126. மோகவதைப்பரணி
127. யாப்பருங்கலக்காரிகை
128. யாப்பருங்கல விருத்தி
129. வளையாபதி
130. வில்லிபுத்தூராழ்வார் பாரதம்
131. வீரசோழியம்

# பின்னிணைப்பு 8

## குறுந்தொகையை மேற்கோளாக எடுத்தாண்ட உரையாசிரியர்கள்

1. அகப்பொருள் விளக்க உரையாசிரியர்
2. அடியார்க்குநல்லார்
3. அழகிய மணவாள ஜீயர்
4. இளம்பூரணர்
5. இறையனாரகப் பொருளுரை ஆசிரியர்
6. கல்லாடர்
7. களவியற் காரிகை உரையாசிரியர்
8. காரி ரத்ன கவிராயர்
9. சங்கர நமச்சிவாயர்
10. சாமிநாத தேசிகர்
11. சிவஞான முனிவர்
12. சேனாவரையர்
13. சொக்கப்ப நாவலர்
14. தக்கயாகப்பரணி உரையாசிரியர்
15. தண்டியலங்கார உரையாசிரியர்
16. தமிழ்நெறி விளக்க உரையாசிரியர்
17. திருமயிலை யமகவந்தாதி உரையாசிரியர்
18. திவ்யப் பிரபந்த ஈட்டு வியாக்யானக்காரராகிய நம்பிள்ளை
19. தெய்வச்சிலையார்
20. நச்சினார்க்கினியர்
21. பரிமேலழகர்
22. புறநானூற்று உரையாசிரியர்
23. பெருந்தேவனார்
24. பேராசிரியர்
25. மயிலேறும் பெருமாள் பிள்ளை
26. மயிலைநாதர்
27. யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர்
28. வைத்தியநாத தேசிகர்

